# கல்கி

KALKI
15.2.87
ரூ. 1.50



## விளையாட்டுத் துறையையும் வீணாக்கும் அரசு



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | [illegible] |
| கொழுப்பு | [illegible] |
| கார்போ[illegible] | [illegible] |
| [illegible] | [illegible] |
| கால்சியம் | கால்சியம் |
| பாஸ்பரஸ் | பேன்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| [illegible] | [illegible] (பி6) |
| [illegible] | வைட்டமின் (பி12) |
| பொட்டாசியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் [illegible] |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் [illegible] |
| வைட்டமின் 'பி1' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

BB4. GLC. 120 Tm



இம்ரான்கான்

# ஒரே நாளில் 10 ஸிக்ஸர்கள்

இம்முறை இந்தியா—பாகிஸ்தான் கிரிக்கெட் டெஸ்ட்கள் விசேஷ முக்கியத்துவம் பெற்றுவிடக் காரணம், இரு நாடுகளின் எல்லையில் நிலவும் பதற்ற நிலைதான். இருபக்கமும் போர்ப்படைகள் குவிய, யுத்தத்துக்குத் தயார் நிலையில் கிரிக்கெட் ஆட்டம் நடைபெறுவது அபத்தமாகக் கூடத் தோன்றலாம். ஆனால் வெற்றி தோல்வியை கிரிக்கெட் களத்தில் நிர்ணயிப்பதே நல்லது, யுத்த களத்தில் அல்ல என்பதைப் புரிந்து கொள்ள அதிகம் யோசிக்கத் தேவையில்லை. நல்லவேளையாகப் பேச்சு வார்த்தைகள் நடந்து ஒரு தாற்காலிகச் சமாதானமேனும் ஏற்பட்டுள்ளதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

* இதை எழுதும்போது சென்னை டெஸ்ட் இரண்டு நாட்கள்தான் நடந்திருக்கிறது என்றாலும் இன்று இம்ரான்கானின் ஆட்டத்துக்கு இணையான இன்னொரு சண்டமாருதக் காட்சியைப் பாக்கியுள்ள நாட்களில் காணப் போகிறோமா என்பது சந்தேகமே! பீரங்கியிலிருந்து பாயும் குண்டுகள்போல் ஐந்து ஸிக்ஸர்களையும் பதினாறு பவுண்டரிகளையும் அடித்து மைதானத்தை ரணகளமாக்கிவிட்டார் இம்ரான். படை திரண்டதுபோல் பாகிஸ்தான் 487 ரன்களைக் குவித்துள்ளது. இதனை நமது பாட்ஸ்மன்கள் எப்படி எதிர்த்து, எவ்வாறு சமாளிக்கப் போகிறார்கள் என்ற கவலையில் பல்லாயிரக்கணக்கான இந்தியர்கள் நகங்களை இழந்து நிற்கின்றனர்! இம்ரான்கானின் பீரங்கி பாட்டிங்குக்கு இணையாக அவரது பந்து வீச்சும் மிஸ்ஸைல் ராக்கெட்டாகப் பாய்ந்தால், கூடவே அக்ரமின் போலிங் ஜெட் வேகத்தில் தாக்கினால், நாம் அரோகரா ஆக வேண்டியதுதானா அல்லது அணி வகுத்து நிற்கும் நமது ஏழு பாட்டிங் வீரர்களும் அந்த ஆக்ரமிப்பைத் தடுத்து நிறுத்துவதுடன் நில்லாது, எதிர்த்தாக்குதலும் நடத்துவார்களா?

* ஸ்ரீகாந்த் ஓர் அபூர்வப் பிறவி. பிராக்டிஸ்ஸின் போது காப்டன் கபில்தேவ் விளையாட்டாக அவர் பனியனை ஒரு பக்கம் கிழித்தார். உடனே, "காப்டன்! இந்தப் பக்கமும் கிழிக்கலாம்" என்று சிரித்துக் கொண்டே மறு பக்கத்தையும் காட்டினார் ஸ்ரீகாந்த். இப்படி ஏசுவின் சீடராக நடந்து கொண்டவர், மைதானத்தில் கோபத்துடன் தரையில் பந்தை அடித்தது வியப்பளித்தது.

* அது ஒரு பெட்—பாட்—காட்ச் பிரச்னை. அம்பயர் ராமசாமியின் தீர்ப்பையொட்டித்தான் ஸ்ரீகாந்த் கோபத்தோடு பந்தைத் தரையில் அடித்தார். இப்படி நடந்து கொள்ளலாமா என்று கேட்டதற்கு ஸ்ரீகாந்த் பதில், "நான் உணர்ச்சிவசப்பட்டது உண்மைதான். ஆனால் நான் அம்பயர் இருந்த திசை நோக்கிப் பந்தைத் தரையில் அடிக்கவில்லை. விக்கெட் இருந்த திசையில்தான் அடித்தேன்" — இப்படிக் கூறியதன் மூலம் ஆட்டத்தின் போக்கில் அதிருப்தி அடைவதற்கும் அம்பயரின் தீர்ப்பில் கோபம் கொள்வதற்கும் உள்ள வித்தியாசத்தை உணர்த்தினார் ஸ்ரீகாந்த்.

இது பற்றி பாகிஸ்தானுக்கு நியூட்ரல் அம்பயராகச் சென்று திரும்பியுள்ள ராமசாமியைக் கேட்டபோது, "அதைப் பெரிதுபடுத்தாதீர்கள்; அவர்தான் வருத்தம் தெரிவித்துவிட்டாரே" என்றார் பெருந்தன்மையுடன்.

* சென்னை முதல் டெஸ்ட்டில் ஷோயப் தமது முதல் டெஸ்ட் செஞ்சுரியை எடுத்தார். ஷோயப்பின் தந்தை ஹனீப் முகம்மதும் தேர்ந்த பாட்ஸ்மன். 60—61—ல் பம்பாயில் ஹனீப் அடித்த சதம் நடுத்தர வயது கிரிக்கெட் ரசிகர்கள் பலருக்கு நினைவிருக்கும்.

* பாகிஸ்தான் குழுவின் உதவி காப்டனான ஜாவேத் மியான்தாத் ஷார்ஜாவில் சேதன் சர்மா போட்டுக் கொடுத்த பந்தை ஸிக்ஸராக்கி வெற்றியை இந்தியாவிடமிருந்து பறித்தவர். ஸட்கிளிஃப் ஹாப்ஸுக்கு அடுத்தபடியாக உலகத்திலேயே வேகமாக ஓடுகிற கிரிக்கெட் வீரர் இவர்தான். அப்படி விக்கெட்களுக்கு இடையே வேகமாக ஓடக் கூடியவர் ரன் அவுட் ஆனதுதான் அதிசயம்! இவது ரன் அவுட்டுக்கு வழி வகுத்தவர்கள் வெங்சர்க்கார், கிரண்மோரே.

* வாஸிம் அக்ரம் அசகாய சூரர். தமது பங்குக்கு ஐந்து ஸிக்ஸர்கள் அடித்தார். பாகிஸ்தான் எட்டாவது விக்கெட் பார்ட்னர்ஷிப் முன்பு 95; இப்போது 112 ஆக உயர்ந்துவிட்டது. வாஸிம் அக்ரம் அவுட்டாகி வந்தபோது அரங்கத்தில் அனைவரும் எழுந்து நின்று கைதட்டி மரியாதை கலந்த பாராட்டுத் தெரிவித்தனர்.

— குண்டுமணி

படம்: பாலாஜி

# விளையாட்டுத் துறை வீணாக்கும் அரசு!

* தனசீலன்

சியோலில்தான் பார்த்தோமே! நல்ல வேளையாக நம் நாட்டின் மானத்தைக் காப்பாற்றினார் உஷா. இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் 'உஷா' பெயரைச் சொல்லிக் கொண்டே இருப்பது? இன்னும் பல உஷாக்களையும், சுத்தார் சிங்குகளையும் சார்லஸ் புரோமியோக்களையும் எப்போது உருவாக்கப் போகிறோம்? மத்திய அரசும் மாநில அரசும் இதற்கு ஏதாவது முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறதா?



மத்திய அரசு தன் பங்குக்கு ஒரு திட்டத்தை வகுத்து நிதி ஒதுக்கீடும் செய்துவிட்டது. அதாவது வருடந்தோறும் பள்ளி அளவில் போட்டிகள் நடத்தி, விளையாட்டில் ஆர்வமுள்ள, திறமையுள்ள, மாணவ மாணவிகளைப் பொறுக்கி எடுத்து அவர்களுக்குத் தனி ஹாஸ்டல் கட்டிக் கொடுத்து விளையாட்டை ஒரு ஸீரியஸான விஷயமாக்கி பயிற்சியளிக்க ஏற்பாடு செய்வது என்பதுதான் திட்டம். இதற்கு மத்திய அரசு பணம் கொடுப்பதோடு சரி, திட்டங்களை அமல்படுத்த வேண்டியது மாநில அரசுகள்தான்!



* விளையாட்டுத் திடலா, ஆடு மாடுகள் மேயும் இடமா?



* டாம்னிக்

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை திருச்சி, மதுரை, திருநெல்வேலி, கோயமுத்தூர், சிதம்பரம், சென்னை ஆகிய இடங்களில் இது போன்ற ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டல்கள் இருக்கின்றன. இவற்றுள் கோயமுத்தூரில் பெண்களுக்கு மட்டுமே இருக்கிறது. கிட்டத்தட்ட ஐநூறுக்கும் மேற்பட்ட மாணவ மாணவிகள் இந்த ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டல்களில் தங்கிப் படித்துக் கொண்டு, தங்களுக்குப் பிடித்தமான விளையாட்டில் மேலும் மேலும் பயிற்சியெடுத்துக் கொண்டு, நமது நாட்டிற்குப் பெருமை சேர்க்கத் துடிக்கிறார்கள். ஆனால் தமிழக அரசு அவர்களைச் சரியானபடி ஊக்குவிக்கிறதா? உஷாவையும், வலசம்மாவையும், ஷைனியையும் உருவாக்கிவிட்ட கேரளத்தைப் பார்த்து வயிற்றிலடித்துக் கொள்வதில் அர்த்தமில்லை. சமீபத்தில் மத்திய விளையாட்டுத் துறை அமைச்சர் மார்க்ரெட் ஆல்வா ஒரு கூட்டத்தில் பேசும்போது, 'மாநில அரசுகளுக்கு, விளையாட்டு வளர்ச்சிக்கென இருபது கோடி ரூபாய்க்கு மேல் ஒதுக்குகிறோம். ஆனால் பஞ்சாப், கேரளா, உத்தரபிரதேசம், ஆந்திரா, கர்நாடகா மாநிலங்கள்தான் இந்தத் தொகையை முழுமையாகப் பயன்படுத்துகின்றன' என்று கூறியிருக்கிறார். விளையாட்டுக்கென ஒதுக்கப்பட்ட தொகையை முழுமையாகப் பயன்படுத்தாததன் விளைவு.... இதோ.... திருநெல்வேலிக்கு வாருங்கள்....

பாளையங்கோட்டை பஸ் ஸ்டாண்டிலிருந்து ஹைகிரவுண்டிற்கு போகும் வழியில் இருக்கிறது அண்ணா ஸ்டேடியம். இங்குதான் திருநெல்வேலி ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டல் இருக்கிறது. காலை வேளைகளில் போனால் வண்ண, வண்ண ஸ்போர்ட்ஸ் உடைகளில் மாணவ மாணவிகள் பல்வேறு விளையாட்டுக்களில் பயிற்சியெடுத்துக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். இதைப் பார்க்கும் போது ஏற்படும் ஆனந்தமும் மன நிறைவும் அங்கு உள்ளோருடன் பேசிப் பார்க்கும் போது மாயமாய் மறைவது மட்டுமல்ல; வேதனைகள் நெஞ்சை நிறைக்கின்றன.

ஹாக்கி கோச் டாம்னிக்கைச் சந்தித்த

ணயயும்



* கோச் கோபிநாத்திடம் பயிற்சி பெறும் சீதா, சித்ரா



* ஆர்வத்தோடு பயிற்சி.....

* ஜிம்னாஸ்டிக்ஸ் பயிற்சி பெறும் குழந்தைகள்



* ராஜசேகரன்



* சரியான இடமின்றிக் கிடக்கும் ஜிம்னாஸ்டிக்ஸ் உபகரணங்கள்

தொகையை எங்கேதான் கொண்டுகொட்டுகிறார்களோ?" இப்படி டாம்னிக் சொல்லிக்கொண்டிருந்தபோதே அத்லெடிக் கோச் கோபிநாத் வந்தார்.

"இந்த ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டலில் மொத்தம் எழுபத்திரண்டு மாணவர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு ஒவ்வொரு மாதமும் அரசு தரும் ஹாஸ்டல் பீஸ் வெறும் 250 ரூபாய்தான். ஆனால் ஆந்திராவில் ஒரு பையனுக்கு மாதம் 750 ரூபாய் தருகிறார்கள். இவர்கள் கொடுக்கும் பணத்தில் சத்தான உணவை எப்படி போடுவது? இந்நிலையில் மாநில அளவிலான போட்டிகளில் நமது மாணவன் எப்படி ஆந்திர மாணவனை வெல்ல முடியும்? சரி, இதுதான் இப்படியென்றால், வெளியூர் சென்று டோர்னமென்டில் கலந்து கொள்ளும்போது, ஒரு நாளைக்குப் பதினைந்து ரூபாய்தான் தருகிறார்கள். இன்றைக்குள்ள விலைவாசியில் கட்டுப்படியாகுமா? கேரளாவில் இருபத்தைந்து ரூபாய் கொடுக்கிறார்கள். ஆகவே, நாங்கள்

போது சலிப்புடன் விஷயங்களைச் சொன்னார்:

"ஹாக்கியைப் பொறுத்தவரை மாநில அளவில் விளையாடுபவர்கள் பெரும்பாலும் திருநெல்வேலியைச் சேர்ந்தவர்கள்தான். பதினாறு வயதுக்குக் கீழேயும் பன்னிரண்டு வயதுக்குக் கீழேயும் உள்ள மாநிலப் பெண்கள் அணியில், பாதிக்கு மேற்பட்டவர்கள் எங்கள் மாவட்டத்துப் பெண்கள்தான். ஆனால் எங்கள் கிரவுண்டைப் பார்த்தீங்களா? எவ்வளவு மோசமாக இருக்கு? கோல் போஸ்டில் இருக்கும் 'நெட்'டைப் பாருங்கள், எத்தனை பாழடைந்து கிடக்கிறதென்று. 1986-87க்கான விளையாட்டு உபகரணங்கள் வாங்குவதற்கு இன்னும் பணம் வந்து சேரவில்லை. ஹாக்கியில் லீக் மேட்சுகளை நடத்திப் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலாகிறது. அதனால் பதினாறு வயதைக் கடந்தவர்கள் பெரும்பாலோர் பெரிய நகரங்களுக்குச் சென்றுவிடுகிறார்கள். மாவட்ட விளையாட்டு கவுன்ஸிலிடம் கேட்டால், பணம் இல்லை என்கிறார்கள். மத்திய அரசு கொடுக்கும்



• பால்ராஜ்

• ஹாக்கி கோல் போஸ்ட் — வலையின் கதி இது தான்....





• வெங்கட குருநாதன்

டொனேஷன் வாங்கிக் கொண்டுதான் டோர்னமெண்டுக்குச் செல்ல வேண்டும்.

"எங்கேயாவது வட இந்தியாவில் போட்டி என்றால் கடைசிக் கட்டத்தில்தான் அங்கு செல்ல அனுமதிக்கிறார்கள். இதனால் போட்டி துவங்குவதற்கு முதல்நாள்தான் அங்கே போய்ச் சேர முடிகிறது. அங்கே யிருக்கும் தட்ப வெப்ப நிலையில், நமது பையன்கள் தடுமாறுகிறார்கள். ஆனால் கேரளாவை எடுத்துக் கொள்ளுங்கள், அல காபாத்தில் போட்டியா? பத்து நாட்களுக்கு முன்னரே, டீமை அனுப்பி வைத்து அந்தச் சூழ்நிலைக்குப் பழக்கிவிடுகிறார்கள். இந்தத் தட களத்தைப் பார்த்தீர்களா? எவ்வளவு மோசமாக வைத்துக் கொண்டிருக்கிறார் கள்...." என்று கோபிநாத் சொல்லிக் கொண் டிருந்தபோதே, ஓடிக் கொண்டிருந்த மெயின் ஸன் பீட்டர் என்ற மாணவரை நிறுத்திக் கேட்டோம். "ரொம்பக் கடினமான (hard) பாதை ஸார். இது இன்னும் மென்மையாக் கப்பட வேண்டும்!" என்றார் அவர்.

இந்த ஒவ்வாத சூழ்நிலையிலும் தட கள விளையாட்டுக்களில் திருநெல்வேலி பேர் தட்டிக் கொண்டு போகிறது. டிஸ்கஸ் த்ரோ வில் ப்ளஸ் ஒன் படிக்கும் சித்ரா தமிழ் நாட்டிலேயே ஜூனியர் லெவல் போட்டியில் முதலாவதாக வந்திருக்கிறார். ஜாவலின் த்ரோவில் ரெமாஜிஸ் ஏஞ்சல் என்ற மாண வர் ஜூனியர் போட்டியில் முதலாவதாக வந்திருக்கிறார்.

பாஸ்கட்பால்கோச்ராஜசேகரனின்வருத் தம் கிரவுண்டுக்கு காம்பவுண்ட் சுவர் இல் லாதது. "ஆடு, மாடு, கழுதை, பன்றிகளுக்கு நடுவில் நாங்கள் விளையாடிக் கொண்டிருக் கிறோம்" என்றார் தமாஷாக. ஜிம்நாஸ்டிக் கோச் தாசனுக்கு ஏகப்பட்ட மனத்தாங்கல் கள். "ஜிம்நாஸ்ட்டிக்ஸ் பற்றிய சரியான அறிவே நமது மக்களுக்கு இல்லை. ஏதோ சர்க்கஸ் வித்தை என்று நினைத்துக் கொண் டிருக்கிறார்கள். மனித குலம் தோன்றிய வுடனே தோன்றிய விளையாட்டு இதுதான்! 1896 இல் நடந்த முதல் ஒலிம்பிக்ஸில் ஜிம் னாஸ்டிக்ஸ் இருந்தது. 1952—ல் இந்திய அள விலான ஜிம்நாஸ்டிக்ஸ் போட்டி தமிழ்நாட் டில்தான் நடந்தது. ஆனால் தொடர்ந்து இந்த விளையாட்டுக்கு ஊக்கம் கொடுக் காமல் விட்டு விட்டார்கள். எங்க ளுக்கு இந்த ஸ்டேடியத்தில் லெவல் ப்ளோர் கிடையாது. உபகரணங்கள் இல்லை. இருக்கிற உபகரணங்களை வைப்பதற்கும் சரி யான இட வசதி இல்லை. ஒரு தனி ஹால் கிடையாது. இப்படியிருந்தும் எங்கள் மாண வர்கள் சளைக்காமல் பல போட்டிகளில் கலந்து கொண்டு பன்னிரண்டு பதக்கங்களை வென்றிருக்கிறார்கள். எட்டுப் பேர் தேசிய அணியில் இருக்கிறார்கள். என்னுடைய மாண வர்கள் பல போட்டிகளில் கலந்து கொள்ளச் செல்லும்போது 'கோச்'சான என்னைக் கூட அனுப்புவதேயில்லை!" என்று ரொம்பவும் வருத்தத்தோடு சொன்னார் அவர்.

விளையாட்டுத் திறமைக்காகவே கட்ட பொம்மன் போக்குவரத்துக் கழகத்தில் வேலைக்கு எடுக்கப்பட்டுள்ள குமாரி கீதா பயிற்சி பெறுவதும் இந்த மைதானத்தில் தான். கோயமுத்தூரில் பெண்களுக்கென உள்ள ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டலில் தங்கிப் படித்து பாரதியார் பல்கலைக் கழகத்துக்கு நல்ல பெயரைத் தேடித் தந்த இந்த கீதாவின் தந்தை வெங்கட குருநாதன் ஓர் உடற்பயிற்சி ஆசிரியர்.

"விளையாட்டு நேரம் வீண் நேரம், காலணி கள் சீருடைகள் என்று பணச் செலவு வேறு" என்றெல்லாம் சலித்துக் கொள்ளும் தந்தைகளிடையே வித்தியாசமானவர் வெங்கட குருநாதன். முதல் பெண் வேத வல்லியை ஒரு சிறந்த பாஸ்கட்பால் வீராங் கனையாக உருவாக்கி, பின்னர் கீதாவை சிறந்த 'அத்லெட்'டாக உருவாக்கிக் கொண் டிருக்கும் இவர், தமது குழந்தைகளின் விளை யாட்டு வசதிக்காகவே ஸ்டேடியத்தின் அருகில் குடியிருக்கிறார். இவரின் மூன்றாவது மகள் சித்ராவும், மகன் சுப்பராமனும் தட கள விளையாட்டுகளில் பல பரிசுகள் பெற்ற வர்கள். இரண்டாவது மகள் கீதாவை

உலகம் போற்றும் விளையாட்டு வீராங்கனை யாக உருவாக்க வேண்டும் என்பதில் மிகவும் தீவிரமாக இருக்கிறார். ஏழு தட களை ஆட்டங் கள் கலந்த ஹெப்டாத்தலின் என்னும் போட்டியில் தமிழ்நாட்டின் சார்பாக தேசியப் போட்டியில் நான்கு முறை கலந்து கொண்டிருக்கிறார் கீதா. 1985—ல் இந்தப் போட்டியில் மாநிலத்திலேயே முதலாவதாக வந்தவர் கீதா. இந்த கீதாவால் கட்டபொம் மன் போக்குவரத்துக் கழகம் மட்டுமல்ல; திருநெல்வேலி மாவட்டமும் ஏன் தமிழக முமே பெருமைப் படப் போகிற காலம் வரலாம்.

எல்லோருக்கும் 'ஆல் த பெஸ்ட்' சொல்லிவிட்டு வரும்போது ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டலின் வார்டன் பால்ராஜைப் பார்த் தோம். 'அரசு கொடுக்கும் பணத்தில் ஓரளவு சத்தான உணவு வகைகளையே கொடுக்க முயற்சி செய்கிறேன். ஆனால் இது போதாது. பொருட்களை சூப்பர் மார்க்கெட்டில்தான் வாங்க வேண்டுமென்று அரசு உத்தரவிட் டுள்ளது. அங்கே விலையெல்லாம் மற்ற இடங்களைவிட அதிகமாக இருக்கிறது'' என்று குறைபட்டுக் கொண்டார்.

ஸ்டேடியத்தின் கட்டடங்களுக்கு வெள்ளை யடிக்கக் கூட அரசு பணம் ஒதுக்கவில்லை யாம். கடைசியில் வார்டனே சொந்தப் பணத்தில் வெள்ளையடித்துவிட்டாராம். இந்த விஷயத்தை நம்மிடம் சொன்ன தன சீலன் என்ற இளைஞர், 'இது மட்டுமல்ல சார். 1977—ல் இருந்தே மின்சாரக் கட்டணம் கட்டாததால் போன வருடம் மின் இணைப்பையே துண்டித்துவிட்டார்கள். ஹாஸ்டல் மாணவர்கள் ரொம்பத் தவித்துப் போய்விட்டார்கள். அப்புறம் சிறிது நாட்கள் கழித்துத்தான் கரெண்ட் வந்தது' என்றார்.

இந்த ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டலில் வெயிட் லிஃப்டிங் செய்வதற்கு வசதி கிடையாது. நீச்சல் குளம் வருகிறது வருகிறது என்கிறார் கள். திட்டமே கானல்நீராகப் போய்க்கொண் டிருக்கிறது.

மத்திய அரசின் நிதியுதவியை முழுமை யாகப் பயன்படுத்தி, திறமையுள்ள விளை யாட்டு வீரர்களையும் வீராங்கனைகளையும் ஊக்குவித்து ஒரு நல்ல சூழ்நிலையை உரு வாக்கலாமே! உலகப் போட்டிகளில் நாமும் தங்கப் பதக்கங்களைப் பெற முயற்சி செய்ய லாமே! இதை விட்டுவிட்டு, 'ஐயோ... சின்ன நாடான கொரியா கூட இத்தனை தங்கப் பதக்கங்களைப் பெற்றுவிட்டதே.... ஜப்பான் பதக்கங்களை அள்ளிக் குவிக்கிறதே!' என்று லபோதிபோவென்று அடித்துக் கொள்வதில் பயன் என்ன?

— கௌசல்யா

அட்டையில் செல்விகள் **கீதா, சித்ரா** வண்ணப்படங்களும் நெல்லை மாவட்டச் செய்திகள் தொடர்பான மற்ற படங் களும் எடுத்தவர்: **கே. வி. ஆனந்த்**

# அடுத்த இதழ்...

**நெல்லை மாவட்டத்தில் கல்கி — II**

## பச்சையாறு அணையை எதிர்க்கும் வனத்துறை!

—கவர்ஸ்டோரி



## சபாநாயகர் தொகுதி எப்படி இருக்கிறது?

—ஒரு ரவுண்ட்-அப்

## "கல்கியால் எங்கள் பணி சுலபமாகிறது..."

—நெல்லை கலெக்டர் பேட்டி



# நெல்லை ஒரு மினி ரவுண்ட்-அப்



* குறுகலான ஜங்ஷன் மேம்பாலம்



* சாக்கடை கலக்கும் தாமிரபரணி



* ரவீந்தர் தாராயணன்

* குர்னிகால்சிங் மகிமையில் — நெல்லையின் சில இடங்கள் ஓரளவு ஒழுங்குக்கு வந்திருக்கின்றன. சில ஆக்கிரமிப்புக்கள் விலக்கப்பட்டு இடங்கள் விசாலப்பட்டிருக்கின்றன; பஸ் ஸ்டாண்ட் பக்கத்தில் ஆக்கிரமிக்கப்பட்டிருந்த இடம் — குர்னிகால் முயற்சியினால் கைப்பற்றப்பட்டு, பஸ் ஸ்டாண்ட் கொஞ்சம் விரிவு பட்டிருக்கின்றது; ஆனாலும் குர்னிகால் சிரமத்துடன் நடவடிக்கை எடுத்த சில இடங்கள் திரும்பவும் ஆக்கிரமிக்கப்பட்டுக் கொண்டு வருகிறதாம்!



* குர்னிகால் சிங் காலத்தில் ஆக்ரமிப்பை அகற்றி வெளிவிடப்பட்ட பஸ் ஸ்டாண்ட்

* நெல்லைக்காரர்கள் திரும்பத் திரும்பச் சொல்லிப் புளகாங்கிதமடைந்து போகிற தாமிரபரணி ஆறு கூட களங்கப்பட்டுப் போய்விட்டது. ஊரின் கழிவுகள் எல்லாம் சேர்ந்து ஆற்றின் இயல்பே மாறிப் போய் விட்டது பற்றிக் கொஞ்சம் விஞ்ஞானம் தெரிந்த ஒருவர் அழாத குறையாகச் சொன்



* நெல்லையப்பர் கோவில் பிராகாரம்

ளர். போய்ப் பார்த்தோம், ஆஸ்த்மா நோயாளி மாதிரி ஒடுக்கமாக ஓடிக் கொண்டிருந்தாள் தாமிரபரணி. தாமிரபரணி ஆறு எங்கே ஓடுதுங்க... சாக்கடை தான் ஓடுது.." என்று சங்கடப்பட்டுச் சொன்னார் தொப்பி மாதிரியான குடையின் கீழ் இருந்த கான்ஸ்டபிள்.

* "ஸ்பேஸுக்குப் போன முதல் இந்தியர் யார்?" என்று சடக்கென்று கேட்டால் என்ன பதில் சொல்வீர்கள்? ஆனால் பாளையங்கோட்டையிலுள்ள புஷ்பலதா ஸ்கூலில் இரண்டாம் வகுப்புத் தேர்வுக்கான கேள்வி இது என்றால் நம்புவீர்களா? இப்போது



* தலைவிரித்தான் கல்வெட்டான் குழி

இருப்பது ஐந்தாவது வகுப்பு வரைதான். குட்டியான சேர்கள். சின்ன வட்டமான டேபிள். போர்டுகளில் குழந்தைகள் வரைந்த விதவிதமான படங்கள் என்று வகுப்பே மாறுதலாயிருக்கிறது. சுருக்கமாகச் சொன்னால் கல்வியின் தரம் ஒரு டானிக். "பிள்ளைகளைத் தனித் தனியா பெர்ஸனலாகக் கவனிக்கணும். அதனாலே கொஞ்சம் குழந்தைகளைத்தான் சேர்த்துக்கிறோம். இது மாண்டிசோரி கல்வி முறை" என்கிறார் தலைமையாசிரியையான புஷ்பவேணி அய்யப்பன்.

* நெல்லைக்குப் பாதாளச் சாக்கடைத் திட்டம் தீட்டினாலும் தீட்டினார்கள்; திட்டமே கொஞ்சம் கீழிறங்கிப் போய் விட்டது. 113 லட்சங்கள் செலவில் ஆரம்பிக்கப்பட்டு குழாய்கள் எல்லாம் பதிக்கப்பட்டு விட்ட திட்டம், இரண்டு, மூன்று வருஷங்களாக அப்படியே கிடக்கிறது. அதற்கான ஆபீஸில் குழாய்களெல்லாம் துருப்பிடிக்க ஆரம்பித்துவிட்டன. பாதாளச் சாக்கடைத்திட்டம் என்னாச்சு? ஏன் இப்படி என்கிற குரலாவது போய்ச் சேருமா? இல்லையென்றால் அதுவும் பாதாளத்திற்குத்தானா?

* விதவிதமான சிலைகள். நுணுக்கத்துடன் கூடிய மண்டபம். இதெல்லாம் இருப்பது நெல்லையப்பர் கோவிலில்தான். எத்தனை விசாலமான கோவில்! இருந்தாலும் பக்தர் கூட்டம் இல்லை. வயதான துண்டு போட்ட பெரியவர்கள் பழங்கால மண்டபங்களில் உட்கார்ந்து ஆடுபுலி ஆட்டம் ஆடுகிறார்கள். சிறுவர்கள் கிரிக்கெட் பந்து வீச, உட்பிராகாரச் சிலைகளெல்லாம் பார்வையாளராக 'சைலண்ட்'டாகப் பார்க்கின்றன. கோயில் குளத்திற்கு நடுவிலுள்ள பழங்கால நீராழி மண்டபம் சமீபத்தில் சரிந்திருக்கிறது. வெளியே வருகையில் சமீபத்து மலையாளப் போஸ்டர்கள் மாதிரி செதுக்கப்பட்ட சாஸ்திரச் சிலைகள். இங்கெல்லாம் கைகளில் விரித்தபடி லாட்டரி சீட்டு விற்கிறார்கள் சிறு பையன்கள். எந்தச் சிலையாவது, "தம்பி... எனக்கும் ஒரு ராயல் பூடான் கொடுத்துவிட்டுப் போயேன்" என்று என்றைக்குச் சொல்லப் போகிறதோ?



* பத்தமடை பாய்: நூர்ஜஹான், ரஷீதா பீவி

* தப்பித் தவறி நெல்லை மருத்துவக் கல்லூரிக் கட்டடத்திற்கு முன்னால் உள்ள கட்டடம் பக்கம் போய் விட்டோம். விசாலமான பெரிய கட்டடம். முன்பு இஞ்சினியரிங் காலேஜ் இருந்த இடம். அடுத்து பொதுப் பணித்துறை ஆபீஸ். இப்போது? ஜன்னல் கதவுகளெல்லாம் பிய்ந்த நிலையில் கிடக்கிறது. ஏராளமான அறைகள் அடங்கிய அருமையான கட்டடம். ஒரு மனுஷரில்லை. ஆனால் மனுஷர்கள் நிறையப் பேர் அடிக்கடி உபயோகப்படுத்துகிற இடம் போலிருக்கிறது. சுவரெங்கும் இஷ்டப்படி அருடமி படங்கள், பெரிய தலைவர்களிலிருந்து யாரோ ஒரு கைக்கெட்டாத காதலி வரை மிக மோசமான 'வல்கர்' வார்த்தைகளில் சுவர்களெங்கும் இறைந்து கிடக்கிறார்கள். (எவ்வளவோ ஆயிரம் கொடுத்து வெளியில் இயங்குகிற ஆபீஸ்களை இங்கு இயக்கினால் எவ்வளவு மிச்சம்?) இப்படிப் படித்த மூளைகள் கிறுக்கியிருக்கிற வக்கிரத்தை என்னவென்று சொல்ல?

* டவுன் பக்கம் சுற்றியதில் முன்னால் அமைச்சர் ஆர். எம். வீ. காதில் விழ வேண்டிய பிரச்னைகள் நம் காதிலும் விழுந்தன. "அண்ணை மூன்றடுக்கு மேம்பாலம் இருக்குதில்லையா? அதிலே ஜங்ஷன் மேம்பாலம் ஒண்ணு, ஆட்கள் நடந்து போகக் கட்டியிருக்காங்க. ரொம்பக் குறுகலான பாதை. ஜனங்க காலையிலேயும், மாலையிலேயும் போறதுக்கு எவ்வளவு இடைஞ்சலா இருக்கு? பேசாம அதை அண்டர் கிரவுண்டு வழியாகப் போட்டிருக்கக் கூடாதா?"

"சரிங்க. அப்புறம் பொன்னம்பலம்... உங்களுக்கென்ன பிரச்னைங்க?"

''இங்கே மின் நகர் E.B. காலனியிலே சங்கம் ஒண்ணு உருவாக்கி, அதன் சார்பிலே 143 பிளாட்டுகள் வாங்கி 125 வீடுகளைக் கட்டியும் முடிச்சாச்சு. வரியெல்லாம் ''க்ளீன்'' கட்டுறோம். ஆனாலும் தண்ணீர் வசதி, ரோடு வசதி எதுவும் கிடையா துங்க. 73 இல் லே அவுட் ஒப்புக் கொண்டு விட்டு, கேட்டால் பணம் இல்லேங்கறாங்க. அதுவும் இல்லாம யாரும் இறந்தா புதைக் கிறதுக்கு ஒரு மயானம் கூட இல்லே. இங்கி ருந்து 15 கி. மீ. தூக்கிக் கொண்டு போய்ப் புதைக்க வேண்டியிருக்குங்க...''

''பிறகு உங்களுக்குங்க?''

''முன்னாடி சொன்னவுங்களுக்குள்ள அதே பிரச்னைதான் தியாகராஜ நகர்லே இருக்குற ஜனங்களான எங்களுக்கும். அதோடு இந்தப் பக்கம் நடு ரோட்டுலே 'கல்வெட்டான் குழி'ன்னு பெரிய பள்ளமே இருக்கு. யாருமே அதை மூட முயற்சி பண்ணாம வாகனங்கள் எல்லாமே சுத்திப் போக வேண்டியிருக்குங்க...''

''இப்படி வாங்க சார்!

''என் பேரு நாராயணன் சார். நம்ம அரசாங்க ஆஸ்பத்திரி இருக்குல்லே. அதை யொட்டின ரயில் நகர்லே இருக்கோம். ஆஸ்பத்திரியிலேயிருந்து வர்ற கழிவு நீரெல் லாம் வீட்டுக்குப் பின்னால் உள்ள 'டேங்கு'க் குத்தான் சார் வருது. சில சமயம் சிசுப் பிண்டங்கள் கூட வந்துருக்கு. இதனாலே பல பேரு பாதிக்கப்படுறோம் சார். ஏதாவது நடவடிக்கை எடுக்க உதவினாத் தேவலே...''

''நெல்லையிலிருந்து மதுரை செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் தச்சநல்லூருக்கு அருகில் குறுக்கிடும் ரயில் பாதையில் ஒரு மேம்பாலம் இல்லாததால் பஸ்களுக்கு எத் தனை இடைஞ்சல்ங்கறீங்க...? அதையும் கொஞ்சம் எழுதுங்க சார்...'' இப்படி நம்மிடம் நெல்லை நகரத்திலிருந்து பல குரல் கள்!

* பத்தமடை என்றதுமே பலருக்குப் பாய் நினைவுக்கு வரலாம். அதோடு பத்தமடைக்கு இன்னொரு விசேஷம் சுவாமி சிவானந்தர் பிறந்த இடமும் பத்தமடைதான். பத்து வயது வரை இங்கு இருந்தார் என்கிறார்கள். பிறகு அலோபதி வைத்தியம் படித்து முடித்து, அதன் பிறகுதான் துறவியாகி இருக் கின்றார். சுவாமி, டாக்டருக்குப் படித்திருந் தும் அவர் தமது சொந்த ஊரில் யாருக்கும் வைத்தியம் பார்க்க முடியாமல் போய் விட் டதே என்ற சிலரின் ஆதங்கத்தைப் போக்க, அவர் ஞாபகார்த்தமாக அவர் பிறந்த ஊரில் ஆசிரமம் மாதிரி உருவாகிக் கொண் டிருக்கிறது பெரிய ஆஸ்பத்திரி. கிராமச் சூழலுடன் வெகு ஒழுங்குடன் எழும்பிக் கொண்டிருக்கிறது கட்டடம். ''ஏறத்தாழ 28 லட்சம் செலவில் ஐந்து ஏக்கர் நிலத்தில் உருவாக்கிக் கொண்டிருக்கிறோம். கூடிய விரைவில் வேலைகளை முடித்து — இலவச மருத்துவத்தை ஆரம்பித்து விடுவோம்'' என்றார், பொதுச் சேவை உணர்வோடு டெல்லியிலிருந்து இங்கு ஆஸ்பத்திரிக் கட்டட வேலைகளைக் கவனித்துக் கொள்ள வந்திருக்கும் இளைஞர் டாக்டர் சஞ்சய் குப்தா.

* பத்தமடையில் பாய் நெய்வதற்கென்று தனி யாக ஒரு சங்கமே இருக்கிறது. 190 உறுப்பினர் வரை இருக்கிறார்கள். என்ன நினுசு நினு சான பாய்கள்! சின்ன ஜமுக்காளம் மாதிரி கையில் சுருட்டிக் கொள்ளக் கூடிய பாய்கள். பெயர் பொறித்த நறுவிசான பாய்கள். நுணுக்கமான வர்ணங்களும் வேலைப்பாடுமான பாய்கள் என்று எத்தனை வகை? பார்க்க ஆச்சரியமாகத்தானிருக் கிறது! மேல் நாடுகளுக்குக் கூடக் கொண்டு போய்ப் பெருமைப்பட்டுக் கொள்ளக் கூடிய மதிப்புள்ள சரக்குகள்தான். ஆனால் பாய் பின்னுகிறவர்களின் வாழ்க்கை எப்படி இருக்கிறது?

''ரூபாய் ஐந்நூறு, ஆயிரம் என்று விலை மதிப்புள்ள நுணுக்கமான பாய்களை நெய்ற துக்கு இரண்டு வாரம் கூட ஆகும். ஆனாலும் தினமும் 5 லிருந்து 7 ரூபாய் வரைதான் கிடைக்கும். கோரை வாங்கவும், வர்ணம் வாங்கவும் போக கையிலே ஜாஸ்தி மிஞ்சா துங்க. கஷ்டமான தொழில்ங்க'' என்றார் பாய் பின்னுகிறவரான வயதான நூர் ஜஹான்.

''ஒரு மாசத்துக்கு ஆணும், பெண்ணும் சேர்ந்து நெய்தாலே கிடைக்கிறது 160 ரூபாதான்! அதிலும் ஏழு நாட்களும் வேலை. சரியான வருமானமில்லேங்க'' என்று புலம் பும் ரஹீதாபீவி.

* ''ஊர்லே தண்ணீர்ப் பிரச்னை ஜாஸ்தி. ரொம்ப தூரம் போய்தான் நல்ல தண்ணீர் கொண்டு வர வேண்டியிருக்கு. இதுபற்றிக் கலெக்டரிடம் கூட மகஜர் கொடுத்திருக்கி றோம்'' என்றார்கள் வாசுதேவநல்லூரைச் சேர்ந்த நண்பர்கள் சங்கத் தலைவர் மாரியப் பனும் உறுப்பினரான பார்வையற்ற இளை ஞர் சமுத்திரவேலுவும். சிலர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே தூரத்திலிருந்து தண்ணீர் எடுத்துத் திரும்பிக் கொண்டிருந்த ராஜேஸ்வரி என்கிற பெண்ணை விசாரித் தோம். கஷ்டத்தைச் சொல்லக் கூட கூச்சம் ராஜேஸ்வரிக்கு.

''இங்கே பக்கத்துலே மந்திரி அருணாசலத் தின் சொந்த ஊருக்குப் போகப் பாலம் போட்டாங்க. பாலம் சரியாகக் கட்டாத தால் இரண்டு பக்கமும் மண் அரிச்சு, அதுவும், பக்கத்திலே இன்னொரு பாலமும் ஏதோ தொங்கு பாலம் மாதிரி நிக்குதுங்க. அதோட இங்கு 119 ஹரிஜனங்களுக்கு வீடு கொடுத்துட்டாங்க. இன்னும் பட்டா கொடுக் கலே. பார்த்து ஏற்பாடு செய்யச் சொல் லுங்க சார்'' என்று ஈடுபாட்டுடன் சொன் னார்கள் நண்பர்கள் சங்கத்தைச் சேர்ந்த இளைஞர்கள். நிறைவேறுவது பற்றியெல் லாம் கவலைப்படாமல் — விடாமல் குரல் கொடுத்துக் கொண்டிருக்கிற இளைஞர் களுக்குக் கங்கிராட்ஸ்!

— யூகி

# புதுவை சுற்றுலா
# சொகுசு பேருந்துகளில்
# புனிதப் பயணம் மேற்கொள்வீர்

புதுவை சுற்றுலா வளர்ச்சிக் கழகம் புனிதத் தலங்களுக்கு சொகுசு பேருந்து மூலம் யாத்திரை வசதிகளை விரைவில் தொடங்க இருக்கிறது.

பிரதி வெள்ளிக்கிழமை இரவு தோறும் சகல வசதிகளும் கொண்ட சொகுசு பேருந்தில் உங்கள் பயணம் தொடங்கும்.

திருமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பாலாஜியையும், திருத்தணி முருகனையும், காஞ்சி காமாட்சியையும் தரிசித்து மனநிறைவுடன் சனிக்கிழமை இரவு திரும்பி விடுகிறோம்.







புதுவை சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் பிரயாணக் கட்டணங்கள் நியாயமானவை. குறைவானவை. உங்கள் யாத்திரை பயனுள்ளதாக அமையவும், வழியில் உங்கள் தேவைகளை மனதில் கொண்டும் வசதியான இடங்களில் பேருந்துகள் நிற்க வகை செய்துள்ளோம். உங்கள் புனித யாத்திரைக்கு சேவை செய்வதை நாங்கள் ஒரு பெருமையாகக் கருதுகிறோம்.

குளிர் சாதன வசதி கொண்ட கார்களும் வாடகைக்கு கிடைக்கும்



ஏனைய விபரங்களுக்கும் மற்றும் தகவல்களுக்கும் தொடர்பு கொள்ளவும்



**சுற்றுலா தகவல் நிலையம்**

பழைய தலைமை செயலகக் கட்டிடம்
கொம்பாஞ்ஞி வீதி, பாண்டிச்சேரி-605 001
தொலைபேசி-4575




**புதுவை சுற்றுலா வளர்ச்சிக் கழகம்**

பாண்டிச்சேரி-605 001.

வெளியீடு : சுற்றுலா இயக்கம், புதுவை அரசு.




# கல்கி

1987 பிப்ரவரி 15
மலர் 45 இதழ் 29
அக்ஷய மாசி 3




# கருணாநிதி குற்றவாளியா?

**சை**தாப்பேட்டை பதினோராவது கோர்ட் மாஜிஸ்திரேட்டின் தீர்ப்பை, மதிக்க வேண்டிய நிலையில் நாம் இருந்தாலும் ஏற்க வேண்டிய அவசியம் இல்லை. அந்தத் தீர்ப்பு விவாதத்துக்குரியது என்று நாம் மட்டும் கூறவில்லை; தமிழகத்தின் பல்வேறு நகரங்களில் உள்ள பல்வேறு நீதிபதிகளே கூறிவிட்டனர். சென்னையில், கருணாநிதியும் அவருடன் சேர்ந்து கைதான தி. மு. க. தலைவர்களும் ''குற்றம்'' செய்ததாகக் கருதப்பட்டுச் சிறைத் தண்டனை பெற்றனர்கள். ஆனால் அதே காரியத்தை வேறு பல ஊர்களில் செய்து கைதான இதர பல தி. மு. க. தலைவர்களை அந்நகரங்களில் உள்ள நீதிபதிகள், ''குற்றம் ஏதும் நடக்கவில்லை'' என்று கூறி விடுவித்து விட்டார்கள். இப்படி முற்றிலும் முரண்பட்ட தீர்ப்புக்கள் வழங்கப்பட்டுள்ளன.

'அரசியல் சாசனம் என்பது அது எழுதப்பட்டுள்ள காகிதத்தில் இல்லை; அதனை அமுல்படுத்துகிற அரசாங்கத்தின் கரங்களிலும் மதித்து நடக்கின்ற மக்களின் மனங்களிலும் இருக்கிறது' என்றார் ஒரு முன்னாள் உயர்நீதிமன்ற நீதிபதி.

'திருக்குரானில் ஒரு தாள் கிழிந்து போகும்; தரையில் கிடக்கும்; அதை எடுத்து யார் காலிலும் பட்டுவிடக் கூடாதே என்பதற்காக எரித்தே விடுவோம்; அது குற்றமாகாது; நோக்கம் புனிதமானது' என்றார் ஒரு பழுத்த முஸ்லிம் அறிஞர்.

'அரசியல் சாசனச் சட்டம் படித்துப் பரீட்சை எழுதிவிட்டு வரும் மாணவன், சரியாக எழுதியிருக்க மாட்டான்; வீடு திரும்பியதும் சுயவெறுப்பிலே அரசியல் சட்டப் புத்தகத்தை ஒரு மூலையில் விட்டெறிவான். அது சாசனத்தை அவமதித்ததாகுமா?' என்று கேள்வி எழுப்பினார் ஓர் அனுபவம் மிக்க வழக்கறிஞர்.

ராஜாஜியும் அரசியல் சாசன எரிப்புத் தொடர்பாகவே தெளிவாக எழுதியுள்ளார். 'ஒரு செயல் குற்றம் என்று கருதப்பட்டால் போதாது; குற்றம் புரிகிற நோக்கம் ஒருவனுக்கு இருந்ததாக நிரூபிக்கப்பட வேண்டும்' என்று காரண காரியங்களைக் கூறி, ஆதாரமாக முன்னுதாரணங்களையும் எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார்.















கருணாநிதியோ, அரசியல் சாசனத்தை அவமதிக்கும் நோக்கம் தமக்கு இல்லவே இல்லை என்றும், அதில் நியாயமான, நாட்டுக்கு நலன் பயக்கிற, தேசிய ஒருமைப்பாட்டுக்கு உதவுகிற, நீதியை நிலைநாட்டுகிற ஒரு திருத்தத்தைக் கோருவதே தமது இலட்சியம் என்றும், அந்தக் கருத்தை வன்மையான விதத்தில் வெளியிட்டாலன்றி, மத்தியில் ஆட்சியில் இருப்போரின் கவனத்தைக் கவர முடியாது என்பதால், சாசனத்தில் உள்ள அந்த வரிகளை மட்டும் தனித்தாளில் கைப்பட எழுதி, அத்தாளை மட்டும் எரிக்கிறோம் என்றும் திரும்பத் திரும்பத் திரும்பக் கூறியுள்ளார்.

எனவே, சைதை நீதிபதி அளித்த தீர்ப்பு எவ்வாறாயினும் மக்களின் தீர்ப்பு வேறாகத்தான் இருக்கும்.

'கருணாநிதி மீது வழக்குத் தொடுத்து விட்டேன்; அவரையும் கைது செய்து சிறை வைத்து விட்டேன்; அவருக்குக் கைதி உடையை மாட்டி விட்டேன்; பின்னர் அவரிடம் இரக்கம் காட்டிப் பெருந்தன்மையுடன் தண்டனைக் காலம் முடியும் முன்னரே விடுவித்தும் விட்டேன்' என்று மார்தட்டிக் கொள்ள முதல்வருக்கு உதவியது அன்றி, வேறு எந்தப் பிரச்னையையும், தமிழக அரசின் இது தொடர்பான நடவடிக்கைகள் தீர்த்து வைக்கவில்லை.

கருணாநிதி இந்தித் திணிப்பை மட்டும் எதிர்க்கிறார் என்று சில தேசிய நாளிதழ்கள் கூடக் கருதி அவ்வாறே தலையங்கம் எழுதுகின்றன. 'பிரதமர்தான் இந்தித் திணிப்பு இராது என்று கூறிவிட்டாரே, போதாதா? அப்படியே இந்தித் திணிப்பு அறியாமை காரணமாகச் சிறிது நடந்தாலும், அதைச் சுட்டிக்காட்டினால் போதாதா? இவ்வளவு பெரிய இயக்கம் தேவையா?' என்றெல்லாம் புலம்புகின்றன. பிரச்னை இதுவல்ல. மத்தியில் இந்தி மட்டுமே ஆட்சி மொழியாக இருக்கும் என்று அரசியல் சாசனம் உறுதி கூறுகிறது. இப்படி இந்திக்கு உயர் அந்தஸ்து அளிக்கப்படும் போது மற்ற மொழிகளைப் பேசும் பாரத மக்கள் இரண்டாந்தரப் பிரஜைகளாக்கப்படுகின்றனர். ஜனநாயகத்தில் அனைவரும் சமம் என்ற கருத்து பொய்த்துப் போகிறது. கருணாநிதியின் போராட்டம் இந்த அபத்த நிலையை நீக்குவதற்காகவே. 'இந்தியாவில் பேசப்படும் எல்லா மொழிகளும் மத்தியில் ஆட்சி மொழியாக ஏற்கப்படக் கூடிய காலம் வரும் வரை அனைத்து இந்திய மக்களுக்கும் லாப நஷ்டங்களைச் சமமாகப் பகிர்ந்து அளிக்கின்ற ஆங்கிலமே மத்தியில் ஆட்சி மொழியாக நீடிக்கும்' என்ற உறுதிமொழியைப் பிரதமரோ வேறு யாரோ வாய்மொழியாக அளித்தால் போதாது; அரசியல் சட்டத் திருத்தத்தின் மூலம் அந்த உறுதி மொழி அளிக்கப்பட வேண்டும்.

இது செய்யப்படாத வரை, இந்தி ஏகாதிபத்தியச் செருக்கும் மேலாதிக்க வெறியும் நீடிக்கும்; இந்தி பேசாத மக்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் தொடரும்; கருணாநிதியும் அவரைச் சேர்ந்த மற்றவர்களும் இன்னும் பல போராட்டக் களங்களைக் காண வேண்டியிருக்கும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

* மகாத்மாவிடம் மனஸ்தாபம்? * கிரிக்கெட் ஆடுவாரா?





* கலையைக் கற்றவர்





* புதிய கணக்கு

## நீங்கள் கேட்டவை — தராசு

* மேலே. பழ. நாகப்பன், சென்னை — 7.

? கிரிக்கெட் பார்க்க ஜியா வருவதாகச் சொல்கிறாரே!

! அவர் கிரிக்கெட் பார்க்க வந்தால் மட்டும் போதாது. கிரிக்கெட் ஆட வேண்டும்— அதாவது நேர்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆங்கிலத்தில் கிரிக்கெட் என்பதற்குப் பேச்சு வழக்கில் இப்படியும் ஓர் அர்த்தம் உண்டு.

* அருண், ஈரோடு — 2.

? 'ஏழைகளின் வாழ்வை எண்ணிச் செயல்படுவதில் காந்தியடிகளைப் போன்றவர் எம். ஜி. ஆர்.' என்கிறாரே, ம. பொ. சி.?

! காந்தியடிகளின் சமகாலத்தில் வாழும் வாய்ப்புக் கிடைத்த ம. பொ. சி. அவர்களுக்கு அந்த மகாத்மாவிடம் என்ன மனஸ்தாபமோ!

* கிருஷ்ணா நகர் ராஜகோபால்,
சென்னை — 82.

? விஷச் சாராயம் மறுபிறவி எடுத்துள்ளது எதைக் காட்டுகிறது?

! 'முப்பிறவி' கண்ட பெருமையை.

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? விஷச் சாராயம் அருந்திப் பலர் இறந்துள்ளனரே! விஷச் சாராயத்தை முறியடிக்க முயலாமல் இருக்கும் அரசுக்கு இப்படிப் பட்டதொரு மதுவிலக்கு அவசியம்தானா?

! இப்போது எம். ஜி. ஆரும் உங்களைப் போலவே சிந்தித்துக் கொண்டிருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால், கள்ளச் சாராயத்தை ஒழிக்க முடியவில்லை என்று ஓர் அரசே கூறுமானால், அந்த அரசு தொடர்ந்து ஆட்சி செய்யும் தகுதியை இழந்து விட்டது என்பதுதான் பொருள்.

* பாலை அசோக், திருச்சி — 1.

? தமிழகத் தலைமைச் செயலகத்தில் கம்ப்யூட்டர் முறை அமல்படுத்தப்பட்டுள்ளது குறித்து...?

! இனி கம்ப்யூட்டர்களும் ஆமை வேகத்தில்தான் செயல்படும் என நம்பலாம்.

* ஆர். சித்ரா, அல்லூர்.

? அலுத்துப் போய் விட்டது சார்! இந்தக் கேள்வியையாவது பிரசுரிப்பீங்களா, மாட்டீங்களா?

! அது சரி, கேள்வியே கேட்கவில்லையே நீங்கள்!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'கார் உள்ளளவும் கடல் உள்ளளவும் தமிழகத்தின் நிரந்தரமான முதல்வர் புரட்சித் தலைவர்தான் என்பது மக்கள் தீர்ப்பு — ஆண்டவன் கட்டளை!' என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே!

! கார் உள்ளளவும், கடல் உள்ளளவும் தான்தான் நிரந்தரக் கொ. ப. செ. என்று சொன்னாரா? இல்லையே! எவ்வளவு சாமர்த்தியம் பாருங்கள்!

ப. சுகுமாரர் ராஜ், தூத்துக்குடி — 1.

? 'மொழிவாரியாக மாநிலங்களைப் பிரித்



# விஷச் சாராயம் மறுபிறவி எடுத்துள்ளதே?

தது தவறு' என்பது போன்ற கேள்விகளுக்கு, அறிவு பூர்வமாகப் பதிலளிக்கும் நீங்கள் 'மாடர்ன் உடைகளில் 'சிக்'கென்று பொருந்துபவர் யார்?' போன்ற கேள்விகளுக்கும் பதிலளிக்க வேண்டுமா?

! மொழிவாரி மாநிலம் பற்றிய அறிவு பூர்வமான கேள்விகளோடுதான் 'சிக்' கெனப் பிடிக்கும் கேள்விகளும் வருகின்றன சுவாமி!

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? பழையதுக்குத் தொட்டுக் கொள்ள ஏற்றது எது?

! உப்புப் போட்டுக் காய வைக்கப்பட்ட நார்த்தங்காயை விட உயர்வு, பச்சை மிளகாய் நறுக்கிப் போட்ட எலுமிச்சை ஊறுகாய்; அல்லது மிளகாய்ப் பொடி சேர்த்த கார எலுமிச்சை ஊறுகாய். அதை விடச் சிறந்தது கிடாரங்காய் ஊறுகாய். இன்னும் இசைவான விஷயம் தேவையானால் முதல் நாள் இரவு செய்த வெங்காய வற்றல் குழம்பு. என்றாலும் மிச்சமான வற்றையெல்லாம் கூட்டாகச் சேர்த்துக் கொதிக்க வைக்கப்பட்ட எரித்த குழம்பு இருக்கிறதே, அதற்கு வேறு எதுவும் ஈடாகாது பேர்ங்கள்!

* எஸ். சண்முகம், சீர்காழி.

? சமீபத்தில் தாங்கள் மனைவியுடன் சேர்ந்து ரசித்துப் பார்த்த திரைப்படம் எது? காட்சி என்ன?

! 'கொக்கூன்' என்ற ஆங்கிலப் படத்தைச் சொல்லலாம். முதியோர் இல்லம் ஒன்றில் வசிக்கும் பல கிழட்டு ஜோடிகளை வைத்து, கொஞ்சம் விண்வெளி மசாலாவையும் சேர்த்து ரொம்பவும் உணர்ச்சிபூர்வமாக எடுத்திருக்கிறார்கள். காட்சிக்குக் காட்சி ரசனைக்குரிய படம் அது.

* எஸ். ஜே. சித்திரக்குமார், திட்டச்சேரி—3.

? எஸ். டி. எஸ். என்ன செய்கிறார்?

! அன்புத் தங்கையாம் அம்மையாரை அரவணைத்துக் கொண்டு போகும் கலையைக் கற்றுக் கொண்டு விட்டார்.

* சி. தங்கப்பழம், மேலக்கிருஷ்ணன்புதூர்.

? கண்ணை இமை காப்பது போல, இந்தியத் திருநாட்டை மேம்படச் செய்வது மக்களா? அரசா?

! இரண்டுமில்லை. ஏதோவொரு தெய்வீக சக்திதான் நம்மைக் காப்பாற்றி முன்னேற்றிக் கொண்டுமிருக்கிறது.

* அ. பாபுஜி, நந்தியநல்லூர்.

? கலைஞர் ஆட்சியில் பொற்காலமா? அல்லது எம். ஜி. ஆர். ஆட்சியில் பொற்காலமா?

! எனக்கென்னவோ தற்காலத்தைப் பார்க்கும் போது, கற்காலமே பொற்காலமாக இருந்திருக்குமென்று தோன்றுகிறது.

* கே. குருராஜ், விருத்தாசலம் — 1.

? கடன் என்ற சொல்லுக்குப் பொருள் என்ன?

! முன்பெல்லாம் வராத கடனை 'காந்தி கணக்கு' என்பார்கள். இப்போது அது 'பூஜாரி கணக்கு.'

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

பானு அசோக்,
63, திருநகர்,
சருமண்டபம்,
திருச்சி — 620 001.

# திருமதி ஒரு வெகுமதி



நாகர்கோவில் நாதமுனியான விசு, தன்னுடைய மாப்பிள்ளையை செலக்ட் பண்ணுவதும், அவரை வளைத்துப் போடுவதற்காகச் சினிமா உலகின் சாஸ்வத டெக்னிக்கான முத்தம் கொடுத்தலை நிறைவேற்றுவதும், அப்புறம் அந்தக்காட்சியைக்கொண்டு வந்து, தன் வருங்கால மாப்பிள்ளை வீட்டில் போட்டுக் காட்டுவதும், அமர்க்களம்தான் என்றாலும், எந்த அப்பா இப்படி ஓர் ஐடியாவை நடைமுறையில் கொண்டுவர முன் வருவார் என்று யோசித்தால், யோசித்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான்.

எஸ். வி. சேகர் வீட்டை ஜப்தி செய்யப் போகும் போது அம்மாவும், பெண்ணும் இருந்த கோலமென்ன, அப்புறம் கோவில் மண்டபத்தில் பெண்ணைகப்பட்டவள் பவுடர் அலங்காரத்தில் சடுபடுவதென்ன, படிப் படியாக எஸ். வி. சேகர் குடும்பத்தில் ஊடுருவி அந்தக் குடும்பத்தின் வீழ்ச்சிக்கே காரணமாவதென்ன? அம்மாவாக எம். என். ராஜம் எப்போதும் போல்தான் என்றாலும் பெண்ணை நடித்தவரை மறக்கவே முடியவில்லை.

நடிகர் விசு தம் பெண் புகுந்த வீட்டில் உருப்பட வேண்டுமென்பதற்காகச் செய்யும் சகுனி வேலைகள் ரசிக்கத்தக்கவை. அதுவும் கையாலாகாத புருஷன் என்று சொல்லி; பெண் அணிந்திருக்கும் மொத்த நகைகளையும் உருவிப் போட வைக்கிற இடம் இருக்கிறது பாருங்கள்; அபாரம்.

நிழல்கள் ரவி — கல்பனா ஜோடிப் பொருத்தம் வெகு பாந்தம். நீண்ட இடைவெளிக்குப் பின்னால் வழிதல்களையெல்லாம் மூட்டை கட்டிவிட்டு, எஸ். வி. சேகர் கொஞ்சம் உருக்கமாகவே பண்ணியிருக்கிறார். மனைவியைக் கோபித்துக் கொள்ளவும் முடியாமல், அக்காவைக் கேள்வி கேட்கவும் முடியாமல் தவிக்கிறாரே ஒரு தவிப்பு. சர்க்கரைப் பொங்கலில் டைமண்ட் கற்கண்டு மாதிரி ஒரு சுவாரசியமான நெருடல்.

பாண்டியன் வசனம் பேசும்போது மட்டும் கேட்பதற்குக் கஷ்டமாய் இருக்கிறது. அதுதான் இப்போதெல்லாம் நல்ல குரல் வளக்காரர்களெல்லாம் பின்னணி கொடுக்கிறார்களே; உபயோகித்துக் கொண்டால் என்னவாம்?

பெரும்பாலும் கதை இந்த வீடு, விட்டால் அந்த வீடு, விட்டால் இன்னொரு வீடு என்று நாடக பாணியில் வீடு லெட்டோடு நகர்வதாலோ என்னவோ, காமிராவும் இந்தப் படத்திற்கு 'இதுவே போதும் என்று தீர்மானித்து விட்டது போலும்.

ஆவதும், பெண்ணாலே பாட்டு, கேட்கலாம்.,

கடைசியில் கல்பனாவிற்கு இந்த முடிவைத் தந்திருக்க வேண்டாம், அனுதாபத்தைக் கேட்டுப் பெறுகிறாற் போல இருக்கிறது!

'பெரியவங்க சொன்னா பெருமாள் சொன்னா மாதிரி' — 'யாரைக் கிண்டல் பண்ணுகிறார் டைரக்டர்?

ரிங் மாஸ்டர் விசுவின் இன்னொரு குடும்பப்பாங்கான படம்!

— ஜெயமன்மதன்




# “கிராமம் மாறிப்போச்சு!”

## 5

**மு**தன்முறையாக எனது உறவினர் வீட்டிற்கு ரேடியோ வந்தது. ரேடியோவைத் திருப்பினார்கள். இசை வந்தது. வீட்டுச் சிறுவனை இசை எங்கேயிருந்து வருகிறதென்று கேட்டார்கள்.

“மாமா உள்ளே ஒளிந்து கொண்டிருக்கிறார்கள்!” என்றான்.

உடனே வேறு ஒரு ஸ்டேஷனைப் போட்டார்கள். கீச்சுக் குரலில் பேச்சு வந்தது. சிறுவன் சொன்னான்: “மாமா, குரலை மாற்றிக் கொண்டு பேசுகிறார்கள்!”

மனித மனம் எந்தப் புதிய விஷயத்தையும் தனக்குத் தெரிந்த அளவிலேயே நின்று பரிசீலிக்கிறது! தனது சொந்த அனுபவத்தை முன்வைத்து எதையும் எடை போடுகிறது.

நியூயார்க் நகருக்குச் சமீபத்தில் ஓர் அரசியல் கட்சிப் பிரமுகர் வந்தபோது, நியூயார்க் தமிழர் ஒருவர் மிகவும் ஆதங்கத்துடன் கூறினார்:

“மற்றெல்லா நாடுகளையும், பார்க்கும் போது, தமிழ்நாடு கற்காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறது என்ற பயம் ஏற்படுகிறது!”

உடனே அந்த அரசியல் தலைவர் தம் கடிகாரத்தைச் சரி செய்தவாறு, மூக்கைத் துடைத்தவாறு கூறினார்: “நமது ஊரில் பல சிமெண்ட் தொழிற்சாலைகளுக்கு இப்போது லைசென்ஸ் கொடுத்திருக்கிறோமே!”

எல்லோரும் ‘குபுக்’கென்று சிரித்துவிட்டார்கள்!

பிற நாட்டு நடப்புக்களைப் புரிந்து கொள்ளாமல், தனக்கு எட்டிய அளவிலே காரியம் செய்து கொண்டு போகும் ஒரு கிராம நாட்டாண்மை மனோபாவத்தைக் கண்டு இரக்கப்படுவதா அல்லது சிரிப்பதா....? சிரிப்பது உடம்புக்கு நல்லது!

இந்த உலகம் முன்புபோல் இல்லை. வெகு வேகமாக மாறி வருகிறது. அதை உணர்ந்து அதற்கு ஈடு கொடுக்க நாம் கற்றுக் கொள்ளாவிட்டால் அது நம்மை விட்டுவிட்டு — நம்மைப் பழங்குடி மக்களாக்கிவிட்டுப்போய் விடும். இன்று உலகம் முழுவதும் பல்வேறு நாடுகளில், ஒன்றை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். மனித மனத்தின் — மனித மூளையின் அபிவிருத்தியில்தான் எதிர்காலம் இருக்கிறது என்ற முடிவுக்கு வந்து செயல்படுகிறார்கள்.

நாடு இன்றிருக்கும்நிலை, நேற்றையஓட்டங்களின் விளைவு. நாட்டின் நாளைய நிலை, நாம் இன்றெடுக்கும் முடிவுகளையும் செயல்களையும் பொறுத்திருக்கிறது. பழங்காலம் போல, நாம் ‘நடப்பது நடக்கட்டும்’ என்று அசமந்தமாக உட்கார்ந்திருக்க முடியாது.

உலகில் மாறுதல்கள் நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன. மாறுதல்கள் மூலம்தான் வளர்ச்சியும் முன்னேற்றமும் நிகழ்கின்றன. மாற்றங்களை எப்படி நாம் பயன்படுத்துவது?

உலகில் நடக்கும் சம்பவங்கள் செல்லும் திசையை நாம் கணிக்கத் தெரிந்திருக்க வேண்டும். நம்மை மாறுதல்களுக்குத் தயார் செய்து கொள்ள வேண்டும். நம்மிடமுள்ள தாதுப் பொருட்கள் என்ன, விளை பொருட்கள் என்ன, கச்சாப் பொருட்கள் என்ன, நமது திறமைகள் என்ன என்று நமது வலிமைகளைப் பயன்படுத்த நாம் முன்வர வேண்டும்.

சினிமா முதல் கம்ப்யூட்டர்வரை கூட்டுக் குடும்பம் முதல் தனிக் குடித்தனம் வரை எப்படியெல்லாம் கடந்த ஐம்பது ஆண்டுகளில் நமது வாழ்வில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்று எண்ணிப் பாருங்கள்; பட்டியலிடுங்கள். பிரமிப்பாக இருக்கும்.

“**மா**றுதல்கள் வெகு வேகமாக நிகழ்கின்றன, நம்மைச் சுற்றி. அவற்றை உணர்ந்து அதைப் புரிந்து கொண்டு அதற்கு ஈடு கொடுத்து, வாழக் கற்றுக் கொள்ளாவிட்டால்நாம்பின்தங்கிவிடுவோம்’ என்றகருத்து தொனிக்கக் கடந்த பதினைந்து ஆண்டுகளாக ஆல்வின் டாப்ளர் என்ற ஓர் எழுத்தாளர் எழுதி வருகிறார்; பேசி வருகிறார்.

தொழில் அதிபர்கள் இந்த மாறுதல்



**ராஜாஜி வாழ்க்கை வரலாறு அடுத்த இதழில் இடம் பெறும்.**

களைப் புரிந்து கொண்டால்தான் மாறி வரும் தேவைகளுக்கேற்பப் புதிய பொருட்களை உற்பத்தி செய்ய முடியும். தனிமனிதர்கள் இதைப் புரிந்து கொண்டால்தான், மாறுதல்களுக்குத் தங்களைத் தயார் செய்து கொள்ள முடியும்.

டாப்ளர் தான் சமீபத்தில் எழுதிய புத்தகத்தில் (**Third Wave**) மனித சரித்திரத்தை மொத்தமாகப் பார்க்கிறார். இன்றுவரை மனித சரித்திரம் மூன்று வகையான, மகத்தான மாற்றங்களைச் சந்தித்திருக்கிறது என்று எழுதுகிறார்.

என்ன அந்த மூன்று வகை மாற்றங்கள்?

மனித வாழ்வு துவங்கியதிலிருந்து சுமார் 1800 வரை மனித சமுதாயம் விவசாயத்தை மட்டுமே நம்பி வாழ்ந்தது. கிராமத்தில் வாழ்ந்தார்கள். சிறுசிறு கூட்டமாக அதே ஊரில் வாழ்ந்தார்கள். தங்கள் தேவைகளை — அரிசி, பால், விறகு, வீடு, துணி என்று அவற்றைத் தாங்களே தயார் செய்து கொண்டார்கள். பண்டமாற்றின் மூலம் தங்களது பிற தேவைகளை—மருந்து, படிப்பு — போன்றவற்றைத் தீர்த்துக் கொண்டார்கள். மனிதர்கள் பெரும்பாலும் உடல் உழைப்பையே நம்பி வாழ்ந்தார்கள்.

1800—லிருந்து 1925 வரை ஒரு தொழில் புரட்சி நடந்தது. இது இரண்டாவது நிலை. யந்திரங்கள் தோன்றின. துப்பாக்கி, அறுவடை செய்யும் மிஷின், பஞ்சைப் பிரித்தெடுக்கும் யந்திரம் என யந்திரங்கள் தோன்றின. 1896—ல் கார் வந்தது. இரும்பு, ரப்பர், பெட்ரோலியம் போன்ற பொருட்களை மக்கள் உபயோகிக்கக் கற்றுக் கொண்டனர். தொழில் சாம்ராஜ்யங்கள் உருவாகின. நகரங்கள் தோன்றின. பாங்கு, இன்ஷ்யூரன்ஸ் போன்ற புதிய நிறுவனங்கள் தோன்றின. வெற்றியும் பணமும் அதிக செல்வாக்கைப் பெற்றன. தொழிலதிபனும் அரசியல் தலைவனும் முக்கியத்துவம் பெற்றார்கள்.

1925—லிருந்து இன்றுவரை ஒரு புதிய மூன்றாவது நிலை உருவாகி வருகிறது. ஒரு பாதுகாப்பற்ற உணர்வு முன்னைவிட மக்களிடம் அதிகம் வளர்ந்திருக்கிறது. வேலை நிரந்தரமல்ல என்ற உணர்வு. மக்களது மாறி வரும் தேவைகளால், தொழில் சாசுவதமல்ல என்ற உணர்வு. ஏவுகணைகளையும் அணுகுண்டுகளையும் எண்ணும் போது வாழ்வு — குடும்பம் — சாசுவதமல்ல என்ற உணர்வு.

செல்வாக்கில் இடமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. அரசியல் தலைவனுக்குப் பதில் 'மக்கள் சக்தி' அதிகம் மேவி நிற்கிறது. தொழில் அதிபர்களுக்குப் பதில் தொழில் நிர்வாகிகள் வந்துவிட்டார்கள். புதிய பொருட்களான கம்ப்யூட்டரும், குரோமோசோமை மாற்றி அமைக்கும் மருந்துகளும் வந்து கொண்டிருக்கின்றன. பெட்ரோலிய எண்ணெய் விரைவில் தீர்ந்து போய்விடும் நிலையில் நிரந்தரமாகக் கிடைக்கும் சூரிய சக்தியையும், கடல் அலைகளையும் காற்றையும் உபயோகிக்க மனிதன் முயன்று கொண்டிருக்கிறான். நாட்பட்டுப் பயன்படும் பொருள்கள் போய், தூக்கி எறியும் பொருள்கள் மிகுந்துவிட்டன. அதாவது சவரக் கத்தி போய் ரேஸர் பிளேடுகள் வந்துவிட்டன.

உலகம் அமெரிக்காவாலும் ரஷ்யாவாலும் தீர்மானிக்கப்படுகிறது என்ற நிலை மாறி உலக செல்வாக்கு ஜப்பானாலும்; சவூதி அரேபியாவாலும், தாய்வானாலும், தென் கொரியாவாலும் நிர்ணயிக்கப்படுகிறது. மனிதர்கள் செய்கிற வேலையைக் கார் தயாரிக்குமிடங்களில் அமெரிக்காவிலும், ஜப்பானிலும் மனித யந்திரங்கள் (**Robots**) செய்கின்றன.

வீடு, வசதி என்ற கவலைகள் நீங்கிய மனிதன் ஆத்ம திருப்திதான் அவசியம் என்று பேசுகிறான். சமீபத்திய சர்வேயில் மக்கள் இந்த ஆத்ம நிறைவுக்கு முக்கியத்துவம் கொடுப்பது தெரியவருகிறது. அமெரிக்காவில் வளர்ந்து வரும் யோக சாதன நிலையங்களும், நமது இந்தியச் சாமியார்களது மடங்களின் வளர்ச்சியும் செல்வாக்கும் இதைக் கோடிகாட்டுகின்றன.

ஜோனஸ் சாக் என்ற நோபெல் பரிசு பெற்ற விஞ்ஞானி கூறுகிறார்: "மனித மனம்—அதன் சக்தி — இன்னும் கண்டுபிடிக்கப் படாத விஷயமாக இருக்கிறது!"

மனித வாழ்வில், இனி மனிதர்கள், மனித உறவுகளைப் பற்றி அதிகம் அக்கறை எடுத்துக் கொள்வார்கள் என்றும் சமாதானமாக வாழ வழி காண்பார்கள் என்றும் அறிஞர்கள் அபிப்ராயப்படுகிறார்கள். இன்றிருக்கும் ஏவுகணைகளையும் அணுகுண்டுகளையும் வைத்துக் கொண்டு பதினெட்டே நிமிஷங்களில் உலகை பஸ்மமாக்கிவிடலாம் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். ஆகவே செய்திப் பரிமாற்றம், கருத்துப் பரிமாற்றம், மனம் விட்டு உண்மைகளைப் பரஸ்பரம் தெரிவித்துக் கொண்டு சேர்ந்து வாழ்தல் — இவை அதிக முக்கியம் பெற்றாக வேண்டும்.

உலகத்தோடு ஒட்ட ஒழுகல்தான் வாழ்க்கை. ஆகவே இந்த உலகம் எப்படி இயங்குகிறது எப்படி மாறி வருகிறது என்பதை நாம் புரிந்து கொண்டால்தான் நம் வாழ்வை அதற்கேற்பச் சரி செய்து கொண்டு ஈடு கொடுத்து வாழ முடியும். நாம் எல்லோரும் அதில் கவனம் செலுத்தினோமானால் தான் நமது நாடும் நமது சமுதாயமும் ஜீவனுடன் அடுத்த தலைமுறையைச் சந்திக்க இயலும்.

— **டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி**

"லக்ஸின் கவர்ந்திழுக்கும் புதுமணம்.
இதற்கு இணை ஏது?"என்கிறார் நளினி.

"எனது ரசிகர்கள் எனக்குப் பிடித்தமானவற்றைப் பற்றி எப்போதும் கேட்கிறார்கள். சரி. அவற்றுள் ஒன்று நிச்சயமாக லக்ஸ். ஏனெனில் அதன் பரிசுத்தமான மென்மை பராமரிப்பு, எனது மேனியெழிலை மென்மைப் பொலிவுடன் வைக்கிறது. அதுவும், இப்போது லக்ஸின் கவர்ந்திழுக்கும் புதுமணத்திற்கு இணையேதும் இல்லை." என்கிறார் நளினி.




புதிய
**லக்ஸ்—சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு.

HLL-25



# ஒரு வித்தியாசமான சந்திப்பு!

லிருந்து பணம் வாங்கிக் கொண்டு இங்கே மதப்பிரசாரம் செய்யும் போலிகள்தான் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்கள் மதப் பிரசாரம் செய்வது மக்களை முன்னுக்குக் கொண்டு வருவதற்காக அல்ல; பணம் பண்ணுவதற்காகத்தான். காணிக்கை வாங்குபவர்களிடம் கடவுள் எப்படி இருக்க முடியும்?

கேள்வி: உங்களுக்குப் பணம் எப்படி வருகிறது?

பாலாசீர்: நான் காணிக்கை என்று எதுவும் வாங்குவதில்லை. ஆனால் அவர்களாக விரும்பிக் கொடுக்கும்போது எப்படி வாங்காமல் இருக்க முடியும்?

கேள்வி: மற்றவர்களுக்கும் அப்படி விரும்பிக் கொடுக்கலாமில்லையா? ஏனெனில், அவர்கள் ஜெபக் கூட்டங்களுக்குச் செல்லும்

# "கல்கி அவதாரம்

''பாலாசீர் லாறி முத்துகிருஷ்ணா' என்ற மகத்தான நாமத்தில் பூமிக்கு வந்துள்ள ஸ்ரீமந் நாராயணரைத் திருநெல்வேலிக்கு அருகிலுள்ள மனுஜோதி ஆசிரமத்தில் தரிசித்து, என்றும் அழியாத அவருடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள். வேதங்கள் கூறுகிற கல்கி அவதாரமான அவரைப் பற்றி உலகுக்குத் தெரியப்படுத்துங்கள்....' என்று கோவையிலிருந்து ஒரு வாசகச் சகோதரி நமக்குக் கடிதம் எழுதியிருந்தார். இதோ பாலாசீருடன் ஒரு சந்திப்பு......

**கே**ள்வி: எல்லா மதமும் ஒன்றே என்ற உங்கள் கருத்தை நாங்கள் மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம். ஆனால் நீங்கள் சார்ந்துள்ள கிறிஸ்துவ மதத்தில் இதற்கு எதிர்ப்பு இருந்திருக்குமே?

பாலாசீர் லாறி முத்துகிருஷ்ணா: ஏராளமாக. இப்போதும் கூடச் சிலர் எதிர்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். இந்தக் கருத்தை வலியுறுத்தி நான் முதன்முதலில் சென்னை மூர்மார்க்கெட் அருகிலுள்ள எஸ்.ஐ.ஏ.ஏ. திடலில் பேசியபோது, என் மீது கற்களையும் செருப்புக்களையும் வீசினார்கள். அதற்காக நான் உண்மையை மறைத்துப் பேச முடியுமா என்ன?

கேள்வி: அப்படியானால் மற்ற மதபிரசாரகர்கள் உண்மையை மறைத்துப் பேசுகிறார்கள் என்கிறீர்களா?

பாலாசீர்: நிச்சயமாக. வெளிநாடுகளி

ஊமைகள் பேசுகிறார்கள்; குருடர்கள் பார்வை பெறுகிறார்கள்; நொண்டிகள் நடக்கிறார்கள்....

பாலாசீர்: அதெல்லாம் வெறும் 'செட் அப்'. மக்களிடம் பணம் பறிப்பதற்காக, ஆரோக்கியமாய் இருப்பவர்களை அப்படி நடிக்கச் செய்து, குணப்படுத்துவது போல் காட்டி வியாபாரம் செய்கிறார்கள். அதையெல்லாம்தான் நான் மக்களுக்கு அடையாளம் காட்டுகிறேன். அதனால்தான் என்னை எதிர்க்கிறார்கள். உண்மையிலேயே கடவுளின் அருள் பெற்றவன் அப்படி 'ஷோ' காட்டமாட்டான். உதாரணத்திற்கு என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். நான் ஒரிஸாவைச் சேர்ந்த ஒரு குஷ்டரோகியை நொடியில் குணமாக்கியிருக்கிறேன். இறந்து போன எத்தனையோ பேரைப் பிழைக்க வைத்திருக்கிறேன். ஆனால் ஒருபோதும் இவற்றை நான் வெளியில் சொல்லி விளம்பரம் தேடிக்

கொண்டதேயில்லை.

கேள்வி: மன்னிக்க வேண்டும். இப்போது உங்களால் ஒரு நோயாளியைக் குணப் படுத்திக் காட்ட முடியுமா? அல்லது இறந்த ஒருவரை உயிர்ப்பித்துக் காட்ட முடியுமா?

பாலாசிர்: இப்படியெல்லாம் கேட்டால் எப்படி? ஆனால் செய்து காட்டியிருக்கிறேன் என்பது உண்மை.

கேள்வி: சரி, அதை விட்டுவிடுவோம். உங்களுக்கு ஏற்பட்ட எதிர்ப்பை எப்படிச் சமாளித்தீர்கள்?

பாலாசிர்: என்னோடு எப்போதுமே ஒரு தெய்வீக ஒளி இருக்கும். அதுதான் என்னைத் தாக்க வரும் எதிரிகளைக் கண் கூச வைத்து ஓடச் செய்யும். சில ஆண்டுகளுக்கு முன்பு கூட பிலாயில் நான் பிரசங்கம் செய்த போது, என்னைத் தாக்குவதற்காகச் சுமார் பத்துப் பதினைந்து பேர் ஆயுதங்களோடு வந்தார்கள். நான் அவர்களைப் பார்த்தேன். அவ்வளவுதான்! திடீரென்று அவர்களின் கண்களுக்கருகிலும் நெற்றியிலும் திரிசூலத் தால் குத்தப்பட்ட மாதிரி குபுகுபுவென்று ரத்தம் பீறிட்டுக் கொண்டு வர ஆரம்பித்து விட்டது. ஓடிப் போய்விட்டார்கள். தாக்க

## நான்தான் என்கிறார்கள்!"

வந்த அவர்களே தாக்குண்டு போய்விட்டார் கள்.

கேள்வி: அப்படி ரத்தம் வரும்போது எடுக்கப்பட்ட புகைப்படங்கள் ஏதும் இருக் கின்றனவா?

பாலாசிர்: கூட்டத்தின் மற்ற நிகழ்ச்சி களைப் புகைப்படம் எடுத்திருந்தாலும் அதை யாரும் எடுக்கவில்லை.

கேள்வி: உங்கள் பிரசங்கத்தில் என்ன பேசுகிறீர்கள்?

பாலாசிர்: ஏசுவும், அல்லாவும், நாரா யண மூர்த்தியும் ஒன்றே. யாரும் எந்த மதத் திலிருந்தாலும் கடவுளையடையலாம். மதம் மாற வேண்டிய அவசியமேயில்லை என்பது தான் எனது பிரசங்கத்தின் சாராம்சம்.

கேள்வி: இந்த உயர்ந்த கருத்துக்கா அப்படியோர் எதிர்ப்பு?

பாலாசிர்: பின்னே? எத்தனையோ போலிப் பிரசங்கிகள் தங்கள் வியாபாரத் திற்காக மதங்களின் மூலம் மனிதர்களைப் பிரித்து வைக்கும் சூழ்ச்சியை அம்பலப்படுத் தும் கருத்தல்லவா அது! அதனால்தான் அத்தனை எதிர்ப்பு.

கேள்வி: மனுஜோதி ஆசிரமம் அமைத்த தன் நோக்கம் என்ன?

பாலாசிர்: ஜாதி, மதம், இனம், மொழி என்று எல்லாவற்றையும் கடந்து வந்து பல் வேறுபட்ட மனிதர்களும் சேர்ந்து வாழும் ஓர் உயர்ந்த இடமாக இருக்க வேண்டும் என்ற நோக்கம்தான். அதன்படியே இங்கு பிராமணர்களிலிருந்து எல்லா ஜாதியினரும் ஒன்றாகச் சேர்ந்து வாழ்கிறார்கள்.

கேள்வி: உங்களைப் பற்றியதொரு துண்டுப் பிரசுரத்தைப் படிக்க நேர்ந்தது. அதில் நீங்கள் தந்தையோடு கடற்கரைக்குப் போயிருந்தீர்களாம்....

பாலாசிர்: ஓ! அதைச் சொல்கிறீர்களா? ஆம். என் தந்தையோடு சிலோனில் இருக் கும்போது நடந்தது அது. என் தந்தை இரா சய்யா கடற்கரை மணலில் உட்கார்ந்து தியானத்தில் ஆழ்ந்து போனார். சிறுவனான நான் கடலை நோக்கி நடக்க ஆரம்பித்தேன். நடந்து கொண்டே இருந்தேன். கடலையே என்னால் தொட முடியவில்லை. ஆம்; நான் செல்லச் செல்லக் கடல் பின்னோக்கிப் போய்க் கொண்டே இருந்தது. அதற்குள் தியானம் முடிந்த என் தந்தை ஓடி வந்து என்னைத் தூக்கிக் கொண்டுவிட்டார். அதற் காக நீங்கள் என்னிடம், இப்போது நான் அப்படி நடந்தால் கடல் பின்னோக்கிச் செல் லுமா என்று கேட்கக் கூடாது.

கேள்வி: கேட்கவில்லை. மேலும் அந்தத் துண்டுப் பிரசுரத்தில் நீங்கள் சிகாகோ நகரில் பேசியபோது....

பாலாசிர்: ஆம்; மனிதன் சந்திரனில் கால் வைப்பதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்பு, நான் அமெரிக்காவிலுள்ள சிகாகோ நகரத் தில் பிரசங்கம் செய்து கொண்டிருந்தேன். அப்போது என் வாயிலிருந்து நெருப்பு ஜ்வாலைகளாக வெளி வந்ததாம். பார்த்தவர் களெல்லாம் சொன்னார்கள். அதோடு வானத்தில் இடிகளின் முழக்கமும், மின்னல் களின் பேரொளியும் மக்களை வியக்கவும் பயம் கொள்ளவும் வைத்ததாம். அதாவது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு விவிலியத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடி, உலக ஆட்சியை எடுத்துக் கொள்ள, யூத அரச பரம்பரையில் இரத்த சம்பந்தமான ஒருவர் தோன்ற வேண்டுமென்று எதிர்பார்க் கப்பட்டிருக்கிறவர் நான்தானென்றும் — இந்து மத வேதங்களில் சொல்லப்பட்டிருக் கிற 'கல்கி' அவதாரம் நான்தானென்றும் மக்கள் உணர்ந்து கொண்டதாகப் பலரும் என்னிடம் சொன்னார்கள்.

கேள்வி: உங்கள் வாயிலிருந்து நெருப்பு ஜ்வாலைகள் வந்தபோது நீங்கள் எப்படி உணர்ந்தீர்கள்?

பாலாசீர்: எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. எப்போதும்போல்தான் இருந்தேன்.

கேள்வி: 'கல்கி' அவதாரம் நீங்கள்தான் என்பது மற்றவர்கள் சொல்வது இருக்கட்டும். நீங்கள் அப்படி உணர்கிறீர்களா?

பாலாசீர்: அதை நீங்கள்தான் சொல்ல வேண்டும். ஆனால் நான் கடவுளோடு தினமும் பேசுகிறேன்.

கேள்வி: எப்படி?

பாலாசீர்: அது ஒருவகையான உணர்வுப் பரிமாற்றம்.

கேள்வி: கடவுளின் ஒளி எப்போதும் உங்களுடனேயே இருப்பதாகச் சொன்னீர்கள்!

பாலாசீர்: ஆமாம். ஒருமுறை இந்த ஆசிரமத்தில் பிரசங்கம் செய்து கொண்டிருந்த ஒருவர் அப்படியே விழுந்து 'கொலாப்ஸ்' ஆகிவிட்டார். அனைவரும் அவர் இறந்து போய்விட்டதாகவே நினைத்தார்கள். நான் தொட்டதுதான் தாமதம்; அப்படியே தூக்கத்திலிருந்து விழிப்பவர்போல எழுந்து மறுபடியும் பிரசங்கம் செய்ய ஆரம்பித்துவிட்டார். இங்கும் நீங்கள், இப்படியெல்லாம் அற்புதங்கள் செய்ய முடியுமானால், ஆஸ்பத்திரிகள் எதற்கு? எல்லா நோயாளிகளையும் இப்படியே குணப்படுத்திவிடலாமே? என்று கேட்கக் கூடாது. அதெல்லாம் சில சமயங்களில்தான் நடக்கும். நினைத்தவுடன் நடத்திக் காட்டிவிட முடியாது.

கேள்வி: இந்த ஆசிரமம் அமைந்துள்ள இப்பகுதி மக்கள் உங்களை எதிர்க்கிறார்களா? ஆதரிக்கிறார்களா?

பாலாசீர்: முன்பு நிறைய எதிர்ப்பிருந்தது. இப்போது அந்த அளவுக்கு இல்லை. எத்தனை எதிர்ப்புகள் இருந்தாலும் அவற்றையெல்லாம் இல்லாமல் ஆக்கக் கடவுள் எப்போதும் இந்த ஆசிரமத்தைக் காவல் காத்துக் கொண்டுள்ளார்.

கேள்வி: எந்த ரூபத்தில்?

பாலாசீர்: பகலில் மேகங்களாகத் தெரிவார். இரவில் ஓர் ஒளிக் கீற்று ரூபத்தில் தெரிவார். பார்ப்பதற்கு அது நட்சத்திர ஒளி போல்தான் தெரியும்.

பாலாசீர் லாறி முத்துக்கிருஷ்ணனைச் சந்தித்துவிட்டுத் திரும்பியதில் ஒரு விஷயம் நிச்சயமாகப் புரிந்தது. 'அவரிடம் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இந்தக் கட்டுரை அற்புதமாகத் தோன்றும்; நம்பிக்கையற்றவர்களுக்கு இந்தச் சந்திப்புக் கட்டுரை அபத்தமாகத் தோன்றும்' என்ற பேருண்மைதான் அது! 'சிலருக்கு அபத்தமாகத் தோன்றக் கூடிய கட்டுரையை ஏன் எழுதிப் பிரசுரிக்க வேண்டும்?' என்று கேட்காதீர்கள்! வேறு சிலருக்கு அற்புதமாகத்தோன்றுமே என்பதற்காகத்தான் பிரசுரித்துள்ளோம்! பார்க்கப் போனால் அற்புதம், அபத்தம் அனைத்துக்கும் மூலமானவன், பாலாசீரும் ஏற்கின்ற பரம்பொருளே அல்லவா!

— இளங்கோவன்

# நியூட்ராமுல் சக்தி






க்ரீம் வளம்கொழிக்கும் அமுல் பால். நலம் தரும் மால்ட். இன்சுவைமிக்க கோக்கோ. கும்மாளம்! இவற்றின் நற்பயனைத் தான் வலியூட்டுகிறது நியூட்ராமுல். எதனுடனும் மிஞ்சமுடியாத நயவிலையிலே கிடைக்கிறது.

| | 1000 gms. | 500 gms. | Refil. |
|---|---|---|---|
| நியூட்ராமுல் | 37.21 | 19.29 | – |
| மால்டோவா | 43.75 | 24.65 | 22.79 |
| பூஸ்ட் | – | 24.89 | 23.06 |
| போர்ன்விடா | 47.48 | 24.67 | 22.81 |

Prices as on 1st January, 1987. Local taxes extra.

அமுல் வழங்கும்

## நியூட்ராமுல்

விளங்குங்கள் நியூட்ராமுல் வஸ்தாத்தாக



விற்பனை விநியோகம்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிட்.,
ஆனந்த் 388 001.

daCunha/GCM/135/86 TAM

யான் நந்தினியைப் பார்க்கவே முடிய வில்லை. அன்றுமுதல் ஒரு தடவை யேனும் நந்தினியைத் தனியே சந்தித் துப் பேசவும் அவள் விரும்பினால் அவளை விடுதலை செய்துகொண்டு போகவும் ஆழ்வார்க்கடியான் முயன்று கொண்டிருக்கிறான். இது வரையில் அம்முயற்சியில் வெற்றி பெறவில்லை....



ந்த வரலாற்றைக் கேட்ட வந்தியத் தேவனுடைய உள்ளம் உருகி விட்டது. கடம்பூர் மாளிகையில் பல்லக்கில் இருந்தது நந்தினி இல்லை என்றும், இளவரசன் மதுராந்தகன் என்றும் ஆழ்வார்க்கடி யானிடம் சொல்லிவிடலாமா என்று ஒருகணம் யோசித்தான். பிறகு, ஏதோ ஒன்று மனத்தில் தடை செய் தது. ஒருவேளை இந்தக் கதை முழுதும் ஆழ்வார்க்கடியானின் கற்பனையோ என்று தோன்றியது. ஆகையால் கடம்பூர் மாளிகையில் தான் அறிந்து கொண்ட இரகசியத்தைச் சொல்ல வில்லை.

அப்போது சற்றுத் தூரத்தில், கடம் பூர் வீரன் குதிரையுடன் வந்து கொண் டிருந்தான்.

''தம்பி! எனக்கு நீ உதவி செய் வாயா?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

''நான் என்ன உதவி செய்ய முடி யும்? பழுவேட்டரையர் இந்தச் சோழப் பேரரசையே ஆட்டுவிக்கும் ஆற்றல் உடையவர். நானோ ஒரு செல் வாக்குமில்லாத தன்னந்தனி ஆள். என்னால் என்ன செய்ய முடியும்?'' என்று வந்தியத்தேவன் ஜாக்கிரதை யாகவே பேசினான். பிறகு, ''நம்பி களே! இராஜாங்க காரியங்களைப் பற்றி உமக்கு ஒன்றுமே தெரியாது என்றா சொல்கிறீர்கள்? சுந்தர சோழ மகாராஜாவுக்குஏதாவதுநேர்ந்துவிட் டால், அடுத்த பட்டத்துக்கு உரியவர் யார் என்று உம்மால் சொல்ல முடி யாதா?'' என்றான்.

இப்படிக் கேட்டுவிட்டு, அடியானு டைய முகபாவத்தில் ஏதாவது மாறு தல் ஏற்படுகிறதா என்று வந்தியத் தேவன் ஆவலுடன் பார்த்தான். லவ லேசமும் மாறுதல் ஏற்படவில்லை.

''அதெல்லாம் எனக்கு என்ன தெரியும், தம்பி! குடந்தை ஜோசிய ரைக் கேட்டால் ஒருவேளை சொல் வார்!'' என்றான் நம்பி.

''ஓஹோ! குடந்தை ஜோதிடர் உண்மையிலேயே அவ்வளவு கெட்டிக் காரர்தானா?''

''அசாத்திய கெட்டிக்காரர்! ஜோதி டமும்பார்த்துச்சொல்வார்; மனத்தை அறிந்தும் சொல்லுவார்; உலக விவ காரங்களை அறிந்து அதற்கேற்பவும் ஆருடம் சொல்லுவார்!''

''அப்படியானால் அவரைப் பார்த்து விட்டுப் போகவேண்டியதுதான்!'' என்று வந்தியத்தேவன் மனத்தில் தீர்மானித்துக் கொண்டான்.



ஆதிகாலத்திலிருந்து மனித குலத் துக்கு வருங்கால நிகழ்ச்சிகளை அறிந்துகொள்வதில்பிரேமை இருந்து வருகிறது. அரசர்களுக்கும் அந்தப் பிரேமை உண்டு; ஆண்டிகளுக்கும் உண்டு. முற்றும் துறந்த முனிவர்களுக் கும் உண்டு; இல்லறத்தில் உழலும் ஜனங்களுக்கும் உண்டு. அறிவிற் சிறந்த மேதாவிகளுக்கும் உண்டு; மூட மதியினர்களுக்கும் உண்டு. இத்தகைய பிரமை, நாடு நகரங்களைக் கடந்து, பல அபாயங்களுக்குத் துணிந்து, அர சாங்க அந்தரங்கப் பணியை நிறை வேற்றுவதற்காகப் பிரயாணம் செய்து கொண்டிருந்த நம்முடைய வாலிப வீரனுக்கும் இருந்ததில் ஆச்சரியம் இல்லை அல்லவா?

(தொடரும்)

# பார்க்கப்



• கரும்புவில் உடைந்த மன்மதன்.



• இளவரசனைக் கவர்ந்து வரும் குறத்தி.



• ரதி.



• மீசையா, குறுவாள்களா?

திராவிடர் கழகத்தின் மும்முரமான நபர்கள் பார்த்தால்கூட ஆச்சர்யப்பட்டுப் போவார்கள். அப்படியொரு நுணுக்கம். அப்படியொரு வேலைப்பாடு. திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர்ப் பாதையில் பதினேழு கி.மீ. கடந்து போனால், தனிப்பொட்டலில் இருக்கிறது கிருஷ்ணபுரம் வெங்கடாஜலபதி கோயில். நுழைந்தால் கிராமப்புறச்

# பார்க்க...

* இளவரசியைக் கவர்ந்து வரும் குறவன்.





* சித்திரக்குள்ள முனிவர்.

சூழலிலிருந்து தனித்து. என்னவொரு அற்புதமான சிலைகள்? இளவரசனைத் தூக்கினபடி குறத்தியும், இளவரசியைத் தூக்கினபடி குறவனும் ஒவ்வொரு கல்லில். இளவரசியைத் தூக்கிக் கொண்டு போகும்போது எவனோ ஒரு குட்டையான ஆசாமி, வில்லன் மாதிரி கத்தியால் குத்த, குறவன் விலா எலும்புகள் பிதுங்க நெளிகிறான். என்ன தத்ரூபம்? தாடி வளர்ந்து நரம்பு கூடத் தெரிகிற அர்ஜுனன் சிலை. சின்ன மடலாய் ஒருவனது தாடியைப் பிடித்து அந்நியோன்யமாக இழுக்கிற காதலி சிற்பம்; மாதுளம் பழம் ஒரு கையிலும் பூச்செண்டு ஒரு கையிலுமாக வித்தியாசமான ஒரு டான்ஸ் ஆடுகிற அந்தக் கால கவர்ச்சிக் கன்னி சிலை. உக்கிர ஆண்மையை வெளிப்படுத்துகிற கர்ணன் சிலை. இப்படி எத்தனை சிலைகள்?

உள்ளே போனால் மன்மதன்; எதிரே மூக்குத்தி ஒட்டைகூடத் தெளிவாகத் தெரிய, ரதி; வரி வரியாகத் தாடி தெரியத் தண்டாயுதம் ஏந்தின சித்திரக்குள்ள முனிவர்; மாடும் யானையும் சேர்ந்து தெரியும் 'டு இன் ஒன்' சிலை. இன்னும் விறைப்பான யாளிகள். முனிவரை வலுக்கட்டாயமாகக் காதலிக்கும் (என்னவொரு காதல்?) பெண் சிலை. இப்படி வௌவால்கள் தலைகீழாக மேய்கிற அந்த மண்டபத்தில் எத்தனையோ சிலைகள். 75—ல் திருப்பணி துவங்கியதாக அறிவிக்கிறது போர்டு. ஆனால் முறையான பணி நடந்த மாதிரித் தெரியவில்லை.



* நாட்டியப் பெண்.

புதிதாக— இந்த மாதிரி நுணுக்கம் பரவின சிலைகளை நம்மால் உருவாக்க முடியாது என்றாலும் தன் பெயர், புகழ் என்று எதைப் பற்றியும் கவலைப்படாமல் சுமார் நானூறு வருஷங்களுக்கு முன் ஏதோ ஒரு பழுத்த, நம்மூர்க் கலைஞன் பரபரப்பில்லாமல் உளியால் உழைத்ததற்குக் கூடவா மதிப்புக் கொடுக்கக் கூடாது?

— யூகி



## "ULIP ஒன்றே, ஒரு குடும்பத்துக்கு முழுமையான— நம்பகமான பாதுகாப்பு"

திருமதி புஷ்பா பிள்ளை,
குடும்பத்தலைவி.

இலக்குத் தொகையாக ரூ. 3000/- முதல் ரூ. 40,000/- வரை தேர்ந்தெடுக்கும் வசதி, விபத்து மற்றும் ஆயுள் காப்பீடு, 7.5% வரையிலான போனஸ் (திட்டம் பூர்த்தியாகும்போது கொடுக்கப்படுவது) மற்றும் வருவாய்வரி சட்டம் 80C பிரிவின் கீழ் முழுவரிவிலக்கு முதலிய சிறந்த அம்சங்களைக் கொண்டது யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம்.

**10 ஆண்டு திட்டத்தில் சேருவதற்கு அதிகபட்ச வயது 50 ஆண்டுகளாக தற்போது உயர்த்தப்பட்டுள்ளது.**

ஆண்டிற்கு ரூ. 4000/- வீதம் ரூ. 40,000/- குறியீட்டுத் திட்டத்தில் சேர்ந்து செலுத்துவதின் மூலம் 10 ஆண்டுகள் முடிவில் கிட்டத்தட்ட ரூ. 69,000/- முதல் ரூ. 72,000/- வரை பெறலாம்.

உங்கள் குடும்ப நலனில் ULIP அக்கரை செலுத்துவதுபோல் இத்திட்டத்தை வழங்கிடும் யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா உங்கள் முதலீட்டிற்கு முழுமையான பாதுகாப்பு அளிக்கிறது.

உன்னதமானதையே தேர்ந்தெடுங்கள். அருகிலுள்ள கனரா வங்கியின் கிளைகளிலோ அல்லது யூனிட் ட்ரஸ்டின் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகளையோ அணுகுங்கள்.

மேலும் விவரங்களுக்கு இந்தக் கூப்பனை அதில் காணப்படும் முகவரிக்கு பூர்த்தி செய்து அனுப்புங்கள்.

Unit Trust of India, Post Bag 5063, Madras - 600 001.
Please send me the free ULIP brochure

Name: ____________________

Address: ____________________

____________________

____________________

34



## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

தலைமை அலுவலகம்: பம்பாய் 20.
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

மண்டல அலுவலகம்: "ரெஜினா மான்சன்"
46, செகண்ட் லைன் பீச், சென்னை-600 001
போன்: 27433/24146

முக்கியப் பிரதிநிதிகள்: ● திரு. எ. தனபால், கோயம்புத்தூர். போன்: 34776
திரு. எம். ராமமூர்த்தி, மதுரை. போன்: 30160, 43179 ● திரு. கே. முத்துசாமி, தஞ்சாவூர். போன்: 20374 ● திரு. என்.கே. இங்கர்சால், சேலம். போன்: 51520
திரு. எம். ராமலிங்கம், திருச்சி. போன்: 28280
திரு. பி. நாராயணன், வேலூர். போன்: 21575 ● திரு. எல். பாலகிருஷ்ணன், கடலூர். போன்: 546, 46 ● திரு. எஸ். சுபாஷ் சந்திரபோஸ், நாகர்கோவில். போன்: 4449

# ULIP- முதன்மையான, முழுமையானதொரு திட்டம்.

Sista's - UTI.640.86 TM A R






# அஞ்சலி தொடரும்...

அவர்கள் ஒரு பெரிய மேஜையைச் சுற்றி வட்டமாக அமர்ந்திருந்தார்கள். ஆண்கள். பெண்கள். வயதானவர்கள். ஸ்கூலுக்குப் புறமுதுகு காட்டிய இளைஞர்கள்.

எல்லாருக்கும் ஒரு பொதுவான பிரச்னை: மதுப் பழக்கம்.

மைய இருக்கையில் உட்கார்ந்திருந்த பியர் எழுந்தார்:

''குடிப் பழக்கம் என்பதை நிவாரணம் செய்ய முடியாத நோய் என்று நினைத்திருந்தால் அது தவறு என்று உணர்ந்து கொள்ளுங்கள். எந்தத் தயக்கமும் இல்லாமல், பொய்களை அடுக்காமல், யாருக்கும் வெட்கப்படாமல் உங்களைப் பற்றிய உண்மைகளை இந்த அறையில் நண்பர்களுடன் பகிர்ந்து கொள்ளுங்கள்....''

வரிசையின் கோடியில் இருந்த சைமனுக்கு இவை தேவ வார்த்தைகளாய்த் தோன்றின. உணர்ச்சியால் கொந்தளித்த குரலில் பேசலானான்:

''என் பெயர் சைமன். நகரத்தின் பெரிய ஆர்க்கெஸ்ட்ராவில் தலைமை வயலினிஸ்ட்டாக இருக்கிறேன். இல்லை, இருந்தேன். ராகங்களை மீட்ட வேண்டிய விரல்கள் இப்போது கோப்பைகளை ஏந்திக் கொண்டிருக்கின்றன....'' அவன் கண்களில் மெலிதான நீர்.

''நண்பனே, மதுவை நீ நாடிப் போக என்ன காரணம் என்று யோசித்திருக்கிறாயா?'' பியர் அன்புடன், ததும்பும் ஆர்வத்துடன் கேட்டார்.

''பிரஷர், இசை பற்றிய சிந்தனையும், வேலையின் மும்முரமும் என் மனைவியின் பிடிவாதமும் எப்போதும் என் ரத்தத்தை ரேஸ் விட்டுக் கொண்டே இருக்கின்றன. எனக்கு ஓய்வு தேவை. ஆறுதல் தேவை. நான் கேட்டதை எல்லாம் தர விஸ்கி தயாராயிருந்தது....''

''தவறு நண்பனே... விஸ்கி உன் தோளில் கைபோட்டு நண்பன் போல் நடித்தாலும் சமயம் பார்த்து அதே தோளைப் பிடித்து அதல பாதாளத்திற்குள் தள்ளி விடும். குடிக்க வேண்டும் போலிருக்கும்போது இனிய சர்பத் சாப்பிடு. புத்தகங்களைப் படி. ஷவருக்கு அடியில் போய் நில். கடற்கரை மணலில் ஓடு. நட்சத்திரங்களை எண்ணிக் கொண்டிரு. இன்றிலிருந்து நீ புதிய மனிதன் என்பதை உணர்வாய்....''

''முடியுமா? என்னால் முடியுமா?''

''முடிய வேண்டும். இசை என்பது கலை. உன் ஆற்றலால் உருவாவது. அந்தக் கலையை மது அழித்துவிட அனுமதிக்காதே. கலைக்கு உன்னை அர்ப்பணித்துக் கொள். மதுவுக்கு அல்ல.''

''நம்பிக்கையோடு நீங்கள் சொன்னதையெல்லாம் செய்யப் போகிறேன், மிஸ்டர் பியர்....''

சைமனுக்கு எதிரில் இருந்த பெண் விரல்களைக் கோத்துக் கோத்துப் பிரித்தாள்.

''நான் என் பெயரைச் சொல்ல விரும்பவில்லை'' என்று ஆரம்பித்தாள். ''நான் எப்படி இந்தப் பழக்கத்திற்கு அடிமையானேன்? என் பாஸ் ஒரு நாள் என்னை அழைத்தார். 'இதோ பார் சில்வியா, கொஞ்சம் கம்பெனி கொடுத்....'' வார்த்தையைப் பாதியில் நிறுத்திவிட்டுச் சிரித்தாள். ''என் பெயர் தெரிந்துவிட்டது இல்லை? ஆமாம், சில்வியாதான்... என் பாஸ் சொன்னாரே என்று குடிக்க ஆரம்பித்தேன், என் வேலை போய்விடுமோ என்று பயந்து மதுவை ருசித்தேன். இப்போது அந்த சமுத்திரத்திலிருந்து வெளியே வர வழியில்லாமல் தத்தளிக்கிறேன்...''

''சில்வியா, நீ செய்ய வேண்டியதெல்லாம்....'' என்று பியர் ஆரம்பித்தார்.

ஆளாளுக்குப் பிரச்னைச் சுள்மகளை இறக்கி, அலசி ஆராய்ந்துவிட்டு அனைவரும் கலைந்த பிறகு, சைமன் சில்வியாவிற்காகக் காத்திருந்தான்.

''சில்வியா... நான் உனக்கு உதவ வேண்டுமென்று நினைக்கிறேன்...''

''நீயா?'' சில்வியா புன்னகை புரிந்தாள். ''நீயே உதவி கேட்டு இந்தக் கிளப்பிற்கு வந்தவன்தானே?''

''நாம் இருவரும் சேர்ந்து நம்மைச் சூழ்ந்துள்ள அந்தப் பிசாசை விரட்டியடிப்போம், சில்வியா....''

''உன் அன்பும் அக்கறையும் என்னைத் தொட்டு விட்டன; வா சேர்ந்து ஒரு கிளாஸ்



•• குயிலைக் கண்டதும் குருவிகள் பாடிக் கொண்டு வெளியே பறக்கும்; ஆந்தைகள் இருட்டுக்குள் அலைவதும், எல்லா மனிதரையும் வசப்படுத்தக் கூடிய தெய்வ சக்தி இசைக்கு மனித ஜாதியில் காணப்பட

விஸ்கி சாப்பிடுவோம்....''

''நோ... விஸ்கி நினைவு வந்தால் என்ன செய்யச் சொன்னுர்கள்?''

''சர்பத் குடிக்கலாம் என்கிருயா? இல்லை ஷவருக்கு கீழ் போய் நிற்போமா?'' சில்வியா மனம் விட்டுச் சிரித்தாள். ஆல்கஹால் கண்களை ஊதியிருக்க, அந்தக் கண்களில் இப்போது நட்புத் தேடும் ஆர்வம் பொங்கியது.

''வா, என் வீட்டிற்குப் போவோம். என் மனைவிக்கு உன்னை அறிமுகப்படுத்துகிறேன்.'' சைமன் அவள் கைகளைத் தேடி, கோத்துக் கொண்டான்.

**வீ**ட்டில் அவன் மனைவி குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டும் வாசல் கதவைத் திறந்து நொடிக்கொருதரம் சாலையைப் பார்த்துக் கொண்டும் நிலையில்லாமல் அலைந்து கொண்டுமிருந்தாள்.

''சைமன், நீ எங்கே போய்விட்டாய்?'' வார்த்தைகள் துப்பப்பட்டன.

''மேரி, நான் யாரை அழைத்து வந்திருக்கிறேன் என்று சொல்லவிடேன். இவள் பெயர் சில்வியா....''

''ஹலோ!'' என்று முகத்தில் சிரிப்பில்லாமல் சொல்லிவிட்டு, ''ஆர்க்கெஸ்ட்ராவிலிருந்து உன்னை அழைத்துப் போக வந்திருந்தார்கள். முக்கியமான பர்ஃபாமன்ஸ்... உனக்குத்தான் முக்கிய பங்காம், சைமன். ரிகர்சலுக்கு நீ உடனே போக வேண்டும்...'' என்று மேரி பரபரப்பாய்த் தொடர்ந்தாள்.

''மேரி, விருந்தாளியை முதலில் உபசரிக்கக் கற்றுக் கொள்...'' சைமனின் முகம் கோபத்தில் சிவந்தது. மேரி முகம் திருப்பிக் கொண்டாள்.

சில்வியா, முகத்தில் அனல் கட்டிகள் எறியப்பட்டவள் போல் சற்றே பின்வாங்கினுள். கணவன், மனைவிக்கு நடுவில், தான் ஒரு பிரச்னையாவதை விரும்பாதவளாய், ''சைமன் நாம் அப்புறம் சந்திப்போமே'' என்று மெல்லக் கூறினுள். சடாரென்று திரும்பினுள், வெளியேறினுள்.

சில்வியா வெளியேறியதும் சைமனின் கோபம் கூடியது.

''மேரி, எத்தனை அநாகரிகமாக நடந்து கொண்டாய், நீ!''

''சைமன் என்னைப் பார்த்தா இப்படிச் சொல்கிருய்? வயலினில் நீ இழந்த இடத்தைப் பிடிக்க வேண்டுமென்று எத்தனை கனவுகள் வைத்திருக்கிறேன்? என் கனவுகளுக்கு வாழ்வு கொடு, சைமன். வயலினை எடு... வாசி.

சைமன் ஆத்திரத்தில் வயலின் பெட்டியை வேகமாய்த் தள்ளி வைத்தான். அலமாரியை நாடிப் போய்த் திறந்து,

சில்லிட்டிருந்த பாட்டிலைக் கையிலெடுத்துக் கொண்டான்.

''குடி.... பிராந்தியில் குளி.... எக்கேடு வேண்டுமானுலும் கெட்டுப் போ.''

மேரி, செருப்புகளை மாட்டிக் கொண்டு வேகமாக வெளியேறினுள்.

சைமன் தன் கையிலிருந்த பாட்டிலை வெறித்தான்.

''வேண்டாம்.... இது நண்பனில்லை... குழி பறிக்கும் எதிரி....''

சரேலெனப் பாட்டிலை ஜன்னல் வழியே எறிந்தான். உடைகளைக் கூடக் கழற்றுமல் பாத்ரூமிற்குள் பாய்ந்து ஷவரைத் திறந்து கொண்டான்.

**சை**மனுக்கு இரவுகளில் தூக்கம் போயிருந்தது.

சில்வியாவை நான்கு நாட்களாகப் பார்க்கவில்லை. அவள் முகவரியைக் கேட்டுக் கொள்ளாமல் போனது எவ்வளவு முட்டாள்தனம்! கிளப்பிற்கும் அவள் வருவதேயில்லை. ஒரு போன்கூடச் செய்யவில்லை.

தொண்டையில் தாகம் எடுத்தபோதெல்லாம் வயலினை எடுத்துத் தோளில் அணைத்

துக் கொண்டான். மேரிக்கு மனித உணர்வு களைவிட இசையில், அதன் மூலம் அவன் பெறப் போகும் புகழில்தான் ஆர்வம் என்பதை எண்ணியபோது, அவள் மேல் கோபப்படுவதா, பரிதாபப்படுவதா என்று புரியாமல் தவித்தான். மேரி, இசைக்கு அவன் ஒதுக்கும் நேரம் அதிகரிப்பது கண்டு மகிழ்ந்தாள். அவளுள் நம்பிக்கை ஊற்று களை அது கிளப்பிவிட்டது.

''சைமன், நினைவிருக்கிறதா, நாளைக்குத் தான் கடைசி ரிகர்சல். பெரிய இசைத் தட்டுக் கம்பெனியிலிருந்து வந்து கேட்கப் போகிறார் களாம். ஆர்க்கெஸ்ட்ராவில் எல்லோரும் நீ திரும்பி வந்தது பற்றி எத்தனை சந்தோஷமா யிருக்கிறார்கள், தெரியுமா? நாளைய ரிகர்ச லுக்கு நீ போட்டுப் போக வேண்டிய உடை களைக் கூட நான் ரெடி செய்து விட்டேன், தெரியுமா?''

மறுநாள் அந்தக் கச்சிதமான உடை களை சைமன் அணிந்து கொண்டிருந்த நேரத் தில் போன் வந்தது....

சில்வியாவிடமிருந்து.

''சைமன் நீ உடனே என் வீட்டிற்கு வரு வாயா? வந்து என்னை இந்த நரகத்திலிருந்து காப்பாற்றுவாயா?'' போனில் சில்வியா வின் குரல் நடுங்கியது.

''சில்வியா... சொல், உன் அட்ரஸைச் சொல். இரண்டே நிமிடங்களில் நான் அங்கே இருப்பேன்....'' அவள் சொன்ன முகவரியை மனத்தில் குறித்தான்.

''நோ....'' மேரி குறுக்கே நின்றாள்.

''சைமன், ரிகர்சலில் உன்னை எல்லோரும் எதிர்பார்த்திருப்பார்கள்...''

''அவர்கள் வலுவானவர்கள். நான் போகாவிட்டாலும் சமாளிக்கும் தைரியம் அவர்களிடம் உண்டு. ஆனால் சில்வியா பல வீனமானவள்; அவளுக்கு என் உதவி தேவை, அவசியம்....''

சைமன் புயல்போல் வெளியேறினான்.

சில்வியாவின் அபார்ட்மெண்ட் மாடி யில் இருந்தது. கதவு திறந்தே இருந்தது. கம்பளத்தில் விஸ்கியும், பிராந்தியும் திட்டுத் திட்டாகக் காய்ந்திருந்தன. மேஜைப் புத்தகங் கள் கலைத்துப் போட்ட சீட்டுக்கட்டு மாதிரி பரந்திருந்தன. படுக்கையறையில் சில்வியா மல்லாந்திருந்தாள். அவள் கையிலிருந்து கீழே நழுவத் தயாராய்க் காலியான கண்ணாடிக் கோப்பை. தரையில் உருண்டிருக் கும் பாட்டில்கள்.

''சில்வியா என் அன்புச் சகோதரியே, கிளப்பில் நாம் பேசியதையெல்லாம், கேட்ட அறிவுரைகளையெல்லாம் மறந்துவிட்டாயா?''

''சை...ம...ன்...'' சில்வியாவின் வார்த்தை கள் குழறின. ''குடிக்காவிட்டால் என்னால் நிம்மதியாய் இருக்க முடியவில்லை. நான் குடிப்பதை நிறுத்திவிட்டால், என் வேலை போய்விடும் சைமன்...''

''ஒன்றும் போகாது, வா, நாம் மிஸ்டர்

பியரின் வீட்டிற்கு இப்போது போகிறோம்.''

''வேண்டாம்... நான் உன்னோடு வேறு எங்காவது வருகிறேன்.''

''குளி... குளித்துவிட்டு வா. நான் ரிகர்சலுக்குப் போகிறேன், உன்னையும் அழைத்துப் போகிறேன்.''

ஆர்க்கெஸ்ட்ராவில் வாத்தியங்களுக்குப் பின்னாலிருந்த அத்தனை முகங்களும் இந்த இரண்டு பேர்களையும் காப்பியில் விழுந்த கரப்பான்களைப் போலப் பார்த்தன.

''சைமன், உனக்கு என்ன பைத்தியமா? கண்ட கண்ட குடிகாரியையெல்லாம் இங்கே அழைத்து வர உனக்கு வெட்கமாயில்லே? அவளைத் துரத்திவிட்டு வா....''

''சில்வியா இங்கேதான் இருப்பாள். அவள் இல்லாமல் நான் வயலினைத் தொடமாட்டேன்.''

''வேண்டாம்சைமன்...'' சில்வியா அவன் கைகளைப் பிடித்து இறைஞ்சினாள். ''உன்னிடம் இசை இருக்கிறது. என்னிடம் எதுவும் இல்லே. எனக்காக நீ வாழ்க்கையை இழக்காதே. நான் போகிறேன்...''

''ஒழி... ஒழிந்து போ.... சைமனைப் பிடித்து ஆட்டுவிக்கும் பிசாசே, எங்கேயாவது ஓடிப் போ....'' — ஒரு நண்பன் கத்தினான்.

சைமன் சில்வியாவை அணைத்துக் கொண்டு வெளியேறினான்.

சில்வியாவின் வீடு. கண்கள் நிறைய சந்தோஷ அழுகையுடன் சில்வியா, சைமனையும் அவன் வயலினிலிருந்து வழிந்த இன்னிசையையும் பிரமிப்போடு பார்த்தாள். அந்த இசை அவளுடைய காயங்களைப் பஞ்சால் வருடிக் கொடுத்தது. அவள் துக்கத்தைத் துணி வைத்துத் துடைத்தது. அவள் கவலைகளை ரப்பர் போட்டு அழித்தது. கண்களை மூடி, அந்தக் கணத்தை அப்படியே நெஞ்சில் உறைய வைக்கத் துடித்தாள்.

சைமனின் இந்த அமுத இசை எனக்கு மட்டும் சொந்தமாவது எந்த விதத்தில் நியாயம்? அவனுடைய மனைவி மேரியின் கனவுகளை நான் கலைப்பது தர்மமாகுமா? இதற்கெல்லாம் என்ன முடிவு?

அலமாரியில் எப்போதோ வாங்கி வைத்த பூச்சிக் கொல்லி மருந்து நினைவுக்கு வந்தது, சில்வியாவுக்கு.

'என்னோடு சேர்ந்து உன்னையும் அஸ்தமனத்துக்கு இழுத்துப் போக எனக்கு இஷ்டமில்லே; சகோதரா, என்னை மன்னித்து விடு...' என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டாள்.

மறுநாள் அந்தச் சேதி சைமனின் இதயத்தை வெடி வைத்துத் தகர்த்தது.

''சில்வியா.... சில்வியா....'' என்று நின்று போன அவள் இதயத்தில் மோதிக் கொண்டு அழுதான். ''ஒழிந்து போ, விலகு என்று எல்லோரும் சொல்லிச் சொல்லியே உன்னை உலகத்திலிருந்து விரட்டி விட்டார்களே...''

கொஞ்சம் கொஞ்சமாக அவன் அழுகை ஓய்ந்தது. கண்களில் மெல்ல உறுதி சேர்ந்தது.

'அழுகையில் இல்லே இவளுக்கு அஞ்சலி.'

எழுந்தான். பெட்டியிலிருந்து வயலினை எடுத்தான். சுருதி கூட்டினான். வாசிக்க ஆரம்பித்தான். இங்கே மட்டுமில்லே, இனி எல்லா மேடைகளிலும் இந்த அஞ்சலி தொடரும் என்று தீர்மானித்தான்.

— ஜெயமன்மதன்

அன்பும், பாசமும்தான் சர்வதேச மருந்து என்பதை வலியுறுத்தும் கதை. தெளிவான, நுணுக்கமான டயலாக்ஸ். LA FEMME DE MA VIE எனும் இந்த ஃப்ரெஞ்சு படம் உணர்ச்சிகளின் சரியான கலவை. இசை கூடுதல் இனிமை.

# மாதம் ஒரு மாவட்டம்

இராமநாதபுரம் மாவட்ட மக்களுக்கு நினைவூட்டுகிறோம்!

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் பதின் மூன்றாவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது இராமநாதபுரம் மாவட்டம்தான். ஆகவே, உங்கள் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும், அநீதிகளும், அக்கிரமங்களும் தவிர, சாதனைகளும் ஆலோசனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.2.87 என்பதை மீண்டும் நினைவூட்டுகிறோம்.

உடனடியாக எழுதியனுப்புங்கள்!

— ஆசிரியர்



அவன் வயதோ ஆறுதான்...
செய்வதெல்லாம் குறும்புதான்

அவளுக்குத் தெரியும், வளரும் குழந்தைகளின்
தேவை என்னவென்று!

ஆம்ப்ரோ®
மில்க் பேஸ்
ஊட்டம் நிறைந்த
பிஸ்கெட்




Sista's-EIPL-389/86 Tam.A

16

# சின்னச் சின்ன கனவுகள்

கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. இந்திரா அந்த ஒலியைக்கேட்டுச் சட்டென்று சந்தோஷப்பட்டாள். நந்துவாய் இருக்குமோ? கதவைத் திறப்பதற்காக மெட்டி ஒலிக்க ஓடி வந்தாள்.

''மெதுவாப் போ இந்திரா. புடவை தடுக்கிடப் போவுது. வந்திருக்கிறவங்க நீ கதவைத் திறக்கறதுக்கு முன்னால திரும்பிப் போய்டப் போறாங்களா என்ன?'' என்றான் பாண்டியன்.

நந்து, நந்து என்று மனத்திற்குள் ஆயிரம் முறை சொல்லிக் கொண்டு கதவைத் திறந்தாள்.

''உள்ள வரலாமா? இல்ல இடைஞ்சலா இருக்குமா?'' என்று கேட்டான் ஜெயபால். அதிசயமாய்ச் சிரித்த முகத்துடன் இருந்தான். பின்னால் சுகந்தி நின்று கொண்டிருந்தாள்.

''வாண்ணா... வாங்க அண்ணி'' லேசான ஏமாற்றம் இருந்தாலும் இந்திரா அதை மனத்திற்குள் மறைத்துக் கொண்டாள்.

''அண்ணன் வந்திருக்காருங்க'' என்றாள் திரும்பிப் பாண்டியனைப் பார்த்து..

''என்ன மாப்பிள்ளே.,.. எல்லாம் சௌகரியமா இருக்கா?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் ஜெயபால்.

''வாங்க... வாங்க... இந்திரா, அண்ணனுக்கும் சேர்த்து இலை போடு...''

''இல்லை இல்லை நாங்க இப்பத்தான் வீட்ல டிபனை முடிச்சிக்கிட்டு வர்றோம்'' என்றான் ஜெயபால். கூடத்தில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

''அப்ப காப்பி?''

''ம். அதுக்கு ரெடி. இந்தாம்மா இந்திரா. இந்தப் பழத்தை எடுத்து உள்ளே வை'' என்று சுகந்தி கையில் இருந்த பிளாஸ்டிக் கூடையை வாங்கி இந்திராவிடம் நீட்டினான்.

இந்திரா பழக்கூடையை வாங்கிக் கொண்டு சமையல் கட்டை நோக்கிப் போனாள். ராஜகுமாரியைத் தொடரும் தோழி போலச் சுகந்தி, இந்திராவின் பின்னாலேயே போனாள்.

''எப்படி இருக்கே இந்திரா?''

''நல்லா இருக்கேன் அண்ணி. சசி வரலையா?''

''இல்ல. லீவு நாள்தானே. சினிமாவுக்குப் போலாம் வாடின்னு கூப்பிட்டாரு. அவரு அப்படி மனசாரக் கூப்புடறதே அதிசயம். அதான் அவசர அவசரமாய்ச் சமையலை முடிச்சிட்டுக் கிளம்பிட்டேன். அப்படியே உன்னைப் பார்த்துட்டுப் போலாம்னு வந்தோம். கல்யாணத்துக்கு அப்புறம் உங்களைக் கூப்ட்டு ஒரு விருந்து வைக்கணும்னு அண்ணன் சொல்லிட்டு இருந்தாரு. அடுத்த ஞாயித்துக்கெழமைநம்பவீட்டுக்குச் சாப்பிட வரீங்க'' என்றாள் உரிமையுடன்.

இந்திரா காப்பியை ஆற்றினாள். அண்ணனின் சிரித்த முகம். அண்ணியின் வெகு இயல்பான ஒட்டுதல்.. ஆச்சரியமாக இருந்தது. தலைமேல் வைத்துச் சுமக்க வேண்டிய அவசியம் இல்லை என்றவுடன் பாசம் பீறிடுகிறதா?

''காப்பி எடுத்துக்குங்க அண்ணி'' என்றாள்.

கூடத்தில் அமர்ந்து ஆரவாரமாகச் சிரித்துக் கொண்டிருந்த ஜெயபாலிடம் காப்பி டம்ளரை நீட்டினாள்.

''குடும்மா குடு. உன் கை காப்பியைக் குடிச்சி ஒரு வாரத்துக்கு மேல ஆய்டிச்சே'' என்று வாங்கிக் கொண்டான். ஓர் உறிஞ்சு உறிஞ்சினான். ''அண்ணி சொல்லியிருக்குமே. அடுத்த வாரம் வந்துடுங்க...'' என்றான்.

இந்திரா பாண்டியனை ஏறிட்டாள்.

''மாப்பிள்ளையைப் பாக்காதேம்மா. அவரு சரின்னு சொல்லிட்டாரு... என்ன சொல்றே?''

''வரோம் அண்ணா!''

''சரி இப்பப் பொறப்படுங்க ரெண்டு பேரும்.''

''எங்கே?'' இருவரும் ஒன்றாகக் கேட்டார்கள்.

''சினிமாவுக்குப் போய்க்கிட்டிருக்கோம். டெய்லிதான் ஃபாக்டரி, சைக்கிள் கடை... எல்லா அல்லாட்டமும் இருக்கவே இருக்குது... இன்னிக்கு ஒரு நாளாவது கொஞ்ச நேரம் சந்தோஷமா இருப்போமே.''

''இல்லண்ணா நாங்க வரலே. நீங்க போய்ட்டு வாங்க.''

''ஏம்மா?'' என்றான் ஜெயபால் லேசான திகைப்புடன்.

''என்னங்க... அவங்க வரலேன்னா விட்டுட வேண்டியதுதானே... அவங்களைப் போய்த் தொந்தரவு பண்ணிக்கிட்டு'' என்று சுகந்தி, ஜெயபாலைக் கொஞ்சம் சிணுங்கலாய்க் கண்டித்தாள்.

''ஓஹோ... அப்படியா... சரி, சரி... நாங்க கௌம்பறோம்''

ஜெயபால் பாண்டியனைப் பார்த்து ஒரு முறை கண் சிமிட்டிவிட்டு அவர்கள் பதிலுக்குக் கூடக் காத்திராமல் புறப்பட்டான்.

அவர்கள் புறப்பட்டுச் சென்றவுடன் இந்திரா சமையல் அறையில் அமர்ந்து கொண்டாள். கண்களில் நீர் லேசாகத் திரண்டது. அண்ணனும், அண்ணியும் 'சந்தோஷமாக' இருக்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டு போனதை நினைத்தாள். கடந்த வாரம் முழுக்கப் பாண்டியன் அவளை விட்டு விலகி விலகிப் போனது அவளுக்கு

லேசான அதிர்ச்சியைக் கொடுத்திருந்தது. தாமரை இலைத் தண்ணீர் வாழ்க்கையை எதற்காக வாழ வேண்டும்? அவனுடைய செயல்களில் ஏதாவது தப்பு இருக்கிறதா என்று தேடித் தேடிப் பார்த்தாள். அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. கண்ணீர்தான் இன்னும் கொஞ்சம் எட்டிப் பார்த்தது. அவசரம் அவசரமாக வெங்காயத்தை எடுத்து வைத்து நறுக்கத் தொடங்கினாள்.

''ஏன் அழறே இந்திரா?''

பாண்டியன் சமையல் அறை வாசலில் நின்று கொண்டிருந்தான்.

''இல்லையே... வெங்காயம் அரியறேன் இல்லே?''

''நான் அரிஞ்சி காட்டட்டுமா வெங்காயத்தைக் கண்ல தண்ணி வராம? பொய் சொல்லாதம்மா?''

என்ன பதிலைச் சொல்வேன்?

''அண்ணனும், அண்ணியும் நந்துவைப் பத்தி ஒரு வார்த்தைகூட விசாரிக்கலேங்க.''

''நான்தான் விசாரிக்க வேணாம்னு சொன்னேன்! உம் மனசு இன்னும் வேதனைப்படுமேன்னு.''

இந்திரா வெங்காயம் நறுக்குவதை நிறுத்தி விட்டு அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''நீ ரொம்ப உருகிக்கிட்டு இருந்தே. மனசுக்குள்ளே நந்து, நந்துன்னு அழுதுக்கிட்டிருந்தே. நீ கொஞ்சமாவது சந்தோஷப்படணும்னுதான் அண்ணனை வந்துட்டுப் போகச் சொன்னேன்.''

''அப்ப அண்ணன் விருந்துக்குக் கூப்ட்டது?''

''அது அவங்களாக் கூப்ட்டதுதான். அது கூட என் ஏற்பாடுன்னு நெனைச்சிக்காதே. நீ சந்தோஷமா இருக்கணும்னுதான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டேன். அது வேற மாதிரி திரும்பிடிச்சி. நந்து கோவிச்சிக்கிட்டுப் போய்ட்டான். நந்து என்ன எங்கேயோவா போய்ட்டான்? தங்கராஜ் வீட்டுக்குத்தானே போயிருக்கான். கொஞ்ச நாள் அங்கேயே இருக்கட்டும். அப்பத்தான் தங்கராஜுக்கும் கொஞ்சம் ஆறுதலா இருக்கும். இந்தப் பரிமளா மாத்திரம் இப்படிப் பண்ணிக்கிட்டிருக்கலேன்னு...'' பாண்டியன் குரல் கம்மிப் போய் விட்டது. சட்டென்று பரிமளா அவர்களுக்கிடையில் இடம் பிடித்துக் கொண்டாள். இந்திரா இப்போது அழுவதை மறைக்க முயலவில்லை. அவளை அழ வைக்கக் கூடாது என்று நினைத்து, மேலும் அழ வைத்து விட்டதைப் பார்த்துப் பாண்டியன் நொந்து கொண்டான்.

''அழாதம்மா'' என்றான். பேச்சை மாற்றி நந்து பக்கம் செலுத்தினால் இந்திரா அழுகையை நிறுத்திவிடுவாள் என்று தீர்மா



னித்தான்

''நந்துவுக்கு உம்மேல என்ன கோபம் தெரியுமா?''

''நான் உங்களைக் கல்யாணம் பண்ணிக் கிட்டது.''

''அதான் இல்ல! இனிமே நீ அவனைக் கவனிக்கறதை விட்டுட்டு என்னையும் கவனிக்க ஆரம்பிச்சுடுவியே. அம்மா தனக்கு மட்டுந்தான்னு நெனைச்சுக்கிட்டு இருந்தான். அம்மாவை 'நாந்தான் காப்பாத்துவேன்'னு வார்த்தைக்கு வார்த்தை சொல்லிக்கிட்டு இருந்தான். இப்ப அது ரெண்டும் இல்லன்னு ஆய்டிச்சி பாரு. அதான் கோபம். வளர்ந்தும் வளராத பையன். அதனால உம்மேலே அவனுக்கு ஒரு வெறி. நீ அவனுக்கே அவனுக்கு மட்டுந்தான் சொந்தமா இருக்கணும்னு மனசுல நெனைப்பு வளர்த்துக்கிட்டான். எல்லாம் கொஞ்ச நாள் போனாச் சரியாப் போய்டும்மா. அவன் 'அம்மா'ன்னு இதே வீட்டுக்கு ஓடி வருவான். நீ கவலைப்படறதை நிறுத்து'' என்றான்.

''இப்ப நந்து என்ன பண்ணிக்கிட்டிருக்கானோ?'' என்றாள்.

''தங்கராஜ் கூட சந்தோஷமா இருப்பான். நான் நாளைக்கு ஃபாக்டரியில அவனைப் பார்த்துப் பேசறேன். வீட்டுக்கு வந்துடுன்னு சொல்லிப் பாக்கறேன்.''

''நெஜம்மா?''

''சத்தியமா'' என்றான். அவளைப் பார்த்துச் சிரித்தான்.

நிமிர்ந்து பார்த்த இந்திராவின் கண்களில் இரண்டே இரண்டு நீர் முத்துக்கள் கீழே விழுவதற்குத் தயங்கிக் கொண்டிருந்தன.

பாண்டியன் நடுவிரலை அந்தக் கண்களின் அருகே மிக மெதுவாகக் கொண்டு சென்றான். அந்தநீர்த்துளிகளை மட்டும்ஸ்பரிசித்துச் சுண்டி விட்டான்.

இந்திரா சிலிர்த்துக் கொண்டாள்.

''நந்து இந்த வீட்டுக்கு வர வரைக்கும், அவனுக்குப் புரியற வரைக்கும் நாம தள்ளியே இருப்போம் என்ன?'' என்று மென்மையாக வினவினான்.

இந்திரா பேச்சு எழாமல், பிரமித்துப் போய்த் தலையை மட்டும் ஆட்டினாள்.

தங்கராஜுடன்கைகோத்துக்கொண்டு நடக்கும் போது நழுவிய டிராயரை மேலேற்றிக் கொண்டான்.

''எங்கேண்ணே போறோம்?''

''சாப்ட்டாச்சி இல்லே. பசி எதுவும் இல்லல்ல? அப்ப நான் போற எடத்துக்கு நீ பேசாம வரணும்?''

''வா கலெக்டரு'' என்று அவன் கையைப் பற்றி அந்த நகைக் கடைக்குள் நுழைந்தான் தங்கராஜ்.

''என்ன வேணுங்க... வாங்க... கொலுசா... ஜிமிக்கியா... செயினா? உக்காருங்க.''

''உக்காரு கலெக்டரு. இந்தாங்க இது என் நகைச்சீட்டு. இது உங்க லெட்டரு. சீட்டு முடிச்சாச்சி...

கடைக்காரர் வாங்கிப் பார்த்தார்.

''ஆமா... தாலிக்கு ஆர்டர் பண்ணியிருக்கீங்க போல இருக்கு.''

''இப்ப அதுக்கு அவசியமில்லாமப் போய்டிச்சி. அந்தத் தாலிக்குப் பதிலா நம்ம கலெக்டருக்கு ஒரு செயின் எடுங்க.''

''என்னண்ணே?''

''பேசாம இரு கலெக்டரு.''

மிக மெல்லிய கயிறு போல இருந்த ஒரு செயினை நீட்டினார் கடைக்காரர். தங்கத் தகட்டால் ஆன நட்சத்திரம் கோக்கப்பட்ட மணிக் கயிற்றுச் சங்கிலி.

தங்கராஜ் அதைக் கையில் வாங்கிப் பார்த்தான். கடை விளக்குகள் சிந்திய வண்ண மத்தாப்புகளுக்கு இடையில் அந்தச் செயின் அவனைச் சுண்டி இழுக்க, நந்தகுமாரைப் பக்கத்தில் இழுத்து அவன் கழுத்தில் பூட்டினான்.

''எப்படி இருக்கே பாரு கலெக்டரு?'' என்று கண்ணாடியைக் காட்டினான் தங்கராஜ் கண்களில் நீர் மினுமினுக்க.

நந்தகுமார் பேச்சு எழாமல் தவித்தான்.

''போலாம் வா கலெக்டரு. இன்னிக்கு முழுக்க டவுன்லதான். உங்க அண்ணி கூட நான் சுத்தின எடத்தையெல்லாம் பார்க்கலாம். தியேட்டருக்குப் போவலாம். அண்ணியும் நானும் சேர்ந்து போன தியேட்டரு. சுத்தலாமா, என்ன சொல்றே? நைட் இங்கேயே டிபனை முடிச்சுக்கிட்டு வீட்டுக்குப் போவோம்'' கடையை விட்டு வெளிப்பட்டார்கள்.

மறுநாள் ஃபாக்டரி காம்பவுண்டில் நுழையும்போது கூட நந்தகுமாருக்கு, தங்கராஜின் பரிவுப் பார்வைதான் நினைவில் நின்றது.

''சாயங்காலம் சீக்கிரம் வந்துரு கலெக்டரு. இன்னிக்கும் நம்ப எங்கேயாவது வெளியே போய்ச் சுத்திட்டு வருவோம்'' என்றான் தங்கராஜ் ஹோட்டலில் கைகழுவும் இடத்தில்.

''நீங்க வேலைக்கு வரலியா அண்ணே?''

''இன்னுங் கொஞ்சநாள் போவட்டும்... நீ போனவுடனே உங்கண்ணி வீட்டுக்குள்ள வந்துடுவா... அப்புறம் அவ கூட பேசலைன்னா அது கோவிச்சிக்கும். நீ போ.''

நந்தகுமார் பேசாமல் வந்துவிட்டான். தங்கராஜை நினைத்தால் கண்ணில் அவனை அறியாமல் நீர் பொங்குகிறது.

''நந்து.''

'யாரது?' என்று வியந்து கொண்டு நடையைத் தளர்த்தி நின்றான் நந்தகுமார். திரும்பிப் பார்த்தான்.

பாண்டியன் கையசைத்துக் கொண்டே சைக்கிளில் வந்தான். நந்தகுமாருக்கு புர்ர் என்று ஜல்லிக்கட்டு காளை போலக் கோபம் வந்தது.

அருகில் வந்ததும் தரையில் காலை ஊன்றி நின்றான்.

''எப்படி இருக்கே நந்து? அம்மா ஒன்னை

** ஒருவனுடைய பதவிக் காலம் முடியும் போது அவனுக்கு எல்லாருமே எதிரிகளாகிப் போனாலும் ஒரே ஒரு நண்பன் மிச்சமிருந்தால் போதும் — அவனுடைய மனச்சாட்சி.



## அருள் வாக்கு

மனஸின் உழப்பறிசல், உள்ளே அடக்கி வைத்த ஆசையின் இழுபறி எல்லாம் தூக்கத்திலும் பிய்த்துக் கொண்டு கிளம்ப வழியிருப்பதால் தூங்கிக் கொண்டேயிருந்துவிட்டால் சாந்தி என்பது இல்லை. தூக்க மருந்துக்கும் ஸ்வப்னாவஸ்தை ஏற்படாமல் தடுப்பதற்குச் சக்தியில்லாததால் அதைக் கொண்டும் பூரண சாந்தமான நித்திரை பெற முடியாது. அப்படியே சாந்தமாக ஆழ்ந்து தூங்கினாலும் அது ஜடத்தனந்தானேயன்றிப் பேரானந்தமில்லை.

ஓயாமல் வெளியிலே ஓடிக் கொண்டிருக்கும் மனஸை உள்ளே இழுத்து, 'உள்ளுக்குள்ளே உனக்கு அடி ஆதாரமாக ஒரு கார்யமுமில்லாமலிருக்கும் ஆத்மாவை நினை' என்று பழக்கிக் கொண்டேயிருந்தால்தான், அது அப்படியே நினைத்துநினைத்து, களைத்துவிழுந்த போது, ஸாக்ஷாத் அந்த ஆத்மா மட்டுமே பிரகாசித்துக் கொண்டு விளங்கும். சாச்வத சாந்த ஸௌக்கியத்தை அநுபவிக்கலாம். வேறே வழி கிடையாது.

யதோயதோ நிச்சரதி மனச்—சஞ்சல
மஸ்திரம்।
ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ
வசம் நயேத்॥

என்கிறார் பகவான். "ஸ்திரமாக ஒன்றில் நிற்காமல் சஞ்சரித்துக் கொண்டே இருக்கும் மனஸானது எதெதைப் பற்றி வெளியிலே ஓடினாலும், அது ஒவ்வொன்றிலிருந்தும் இந்த மனஸை இழுத்து அடக்கி, ஆத்மாவிடமே வசப்படுத்தி வைக்க 'வேண்டும்!" என்கிறார்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

நெனைச்சி நெனைச்சிக் கவலைப்படறு நந்து."

"என் டிராயர் சட்டை எல்லாம் அம்மாவோட பெட்டியிலே இருக்கு. எனக்குப் போட்டுக்கறதுக்கு வேணும்" என்றான் நந்தகுமார், வேறு பக்கம் திரும்பிக் கொண்டு.

"நான் ஒன்னை வீட்டுக்கு வர வேணும்னு சொல்றேன்? வீட்டுக்கு வந்துட்டா டிராயர் சட்டையெல்லாம் வீட்லயே வேண்டிய மட்டும் கெடைக்கப் போவுது..."

பேசிக் கொண்டிருந்த பாண்டியனைக் கடந்து மாயகிருஷ்ணனின் கார் சர்ரென்று தாண்டியது.

"கொஞ்சம் இரு. முதலாளிகிட்ட ரெண்டு வார்த்தை பேசிட்டு வர்றேன். உன்னைப் பார்த்துட்டுப் போகலாம்னுதான் நான் இன்னிக்கு இங்க நுழைஞ்சேன். இரு... போயிடாதே..." என்று சொல்லிவிட்டுப் பாண்டியன் சைக்கிளை மிதித்தான்.

கார் சற்று தூரம் சென்றதும் ஒரு குலுங்குக் குலுங்கி நின்றது. முதலாளி கார் பின் ஜன்னலில் இருந்து தலையை நீட்டிப் பாண்டியனிடம் பேசத் தொடங்க, நந்தகுமார் பாண்டியனைத் தவிர்க்க விரும்பினான். பாண்டியன் உடனே திரும்பி விடுவான் போலிருக்கிறதே.

நந்தகுமார் சாலையிலிருந்து சட்டென்று விலகினான். புதர்களிடையே நின்று, பார்த்தான். பாண்டியன் சைக்கிளை மிதித்துத் திரும்புவது தெரிந்தது.

நந்தகுமார் அந்தப் புதர்களுக்கிடையில் ஓடினான். பாண்டியன் தேடட்டும்.. சுற்று வழியாகவாவது அந்த ஆள் கண்ணில் படாமல் ஃபாக்டரியில் நுழைந்துவிடலாம் என்று தீர்மானித்துத் தலை வெளியே தெரியாத வண்ணம் வாத்து போல் நடந்தான் நந்தகுமார்.

புதர்களுக்கிடையில் ஏதோ அசைவைக் கேட்டான் முத்து. நிமிர்ந்து கூர்ந்து பார்த்தான். புதர்களின் சலசலப்புத் தெரிந்தது. சலசலப்பு அவனை நோக்கி வந்தது.

அந்த இடத்தை யாரும் நெருங்குவதில்லை. ஃபாக்டரியிலிருந்து கொஞ்சம் விலகிப் புதர்களுக்கு நடுவே தெரிந்தும் தெரியாமலும் இருக்கும் இடம். அங்கேதான் மாயகிருஷ்ணன் முத்துவை ஸ்பெஷல் ஆசாமியாகச் சேர்த்திருந்தார்.

'முத்து! இந்த இடத்தில நடக்கிற விவகாரம் வெளிய லீக்காச்சின்னு தெரிஞ்சது, மொதல்ல உன்னைச் சுட்டுட்டுத்தான் மறு வேலை பாப்பேன்.'

முத்துவுக்குப் புதர்களுக்கிடையில் இப்போது ஒரு தலை தெரிந்தது. அது பதுங்கிப் பதுங்கி முன்னேறியது.

'வா, வா' என்றான். அருகில் இருந்த ஓர் உருட்டுக்கட்டையை எடுத்துத் தயாராக வைத்துக் கொண்டான்.

(தொடரும்)

# முன்னாள் முதல்வர்

**எம்.எஸ்.பெருமாள்**

ஆற்றங்கரை மணல்திட்டில் மயான அமைதி. ஆவுடையப்ப பிள்ளை என்ன சொல்லப் போகிறார் என்பதைச் செவி மடுக்க, அவர்தம் நண்பர்கள் ஆவலுடன் கைகட்டிக் காத்துக் கொண்டிருந்தார்கள். தாமிரபரணியின் தண்ணென்ற நீரோட்டமும், குறுக்குத்துறை மண்டபத்தில் மோதி அலைபாயும் தென்றலும் அவர்களின் மோனத்தைக் கலைக்க முடியவில்லை. நண்பர்கள் ஐந்து பேருமே ஆவுடையப்ப பிள்ளையின் முடிவைத் தெரிந்து கொள்வதில்தான் தீவிரமாக இருந்தார்கள்.

நெல்லையப்பர் கல்லூரியின் முதல்வர் பதவியிலிருந்து ஆவுடையப்ப பிள்ளை விலகி விடப் போவதாகத் தீர்மானித்துவிட்டார்! இதை அவசர முடிவு என்று நண்பர்களால் ஒதுக்கவும் முடியவில்லை. அதேசமயம் அவரது தீர்மானத்தால் கல்லூரிக்கு ஏற்பட விருக்கும் இழப்பை ஏற்றுக் கொள்ளவும் மனத்தில் திராணியில்லை.

ஆவுடையப்ப பிள்ளை பதவி விலகியதற்குக் காரணம் — தன்மானப் பிரச்னைதான்.

நெல்லையப்பர் கலைக் கல்லூரியின் முதல்வர் என்ற அந்தஸ்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் ஆறு மாத காலம் பயிற்சி பெறச் செல்லும் வாய்ப்பு சென்ற ஆண்டு அவரைத் தேடி வந்தது. தமிழகத்தின் பட்டி தொட்டிகளில் எல்லாம் மூன்று மாத காலம் தொடர் சொற்பொழிவுக்கு அவர் ஏற்கெனவே ஒப்புக் கொண்டிருந்த சமயம்... மேடைப் பேச்சு அவருக்குக் கைவந்த கலை. தமிழ் வழியே சமயப் பணியும் சமயம் வழியே தமிழ்ப் பணியும் ஊடும் பாவுமாக இணைந்து புதிய இலக்கியப் பொன்னாடைகளைத் தமிழன்னைக்கு அவர் சூட்டிக் கொண்டிருந்த பயனுள்ள நேரம். பேச்சுக் கலையைக் காசு பண்ணாமல் கௌரவப் பணியாகவே செய்து வந்தவர். கொடுத்த வாக்கு முக்கியம் என்பதில் ரொம்பவும் தீவிரம். முதன்முறையாக, வெளிநாடு செல்லும் வாய்ப்பைப் பயன் படுத்துகிறோம் என்பதைவிட, ஒப்புக் கொண்ட நிகழ்ச்சிகளை முதன்முறையாகச் சுயநலம் கருதி ரத்து செய்கிறோம் என்பதைத்தான் தம்மைப் பற்றிய சுய விமர்சனமாக சுய தரிசனமாக — ஏற்றுக் கொண்டார்.

அடுத்த ஆண்டும் இதேபோல் அயல் நாட்டுப் பயிற்சிக்கு முன்னதாகவே, அழைப்பு வருமானால் தாம் கலந்து கொள்ள முடியும் என்பதாகப் பதில் எழுதி அனுப்பி விட்டார். ஆனால் அந்த முடிவு கல்லூரி நிர்வாகத்தினருக்குச் சற்றும் ஒப்பவில்லை. பற்றைத் துறந்த சந்நியாசிகளின் நிர்வாகத்தில் நடத்தப் பெறும் கல்லூரியானாலும் புகழ் மயக்கம் சுற்றிச் சுற்றி வரத்தான் செய்தது. இந்தியாவிலேயே முதன்முறையாகத் தங்கள் கல்லூரிக்குக் கிடைத்திருக்கும் வாய்ப்பையும் கௌரவத்தையும் ஆவுடையப்ப பிள்ளையின் வாக்கு சுத்தத்திற்காக இழக்க கமிட்டி சம்மதிக்கவில்லை.

ஆவுடையப்ப பிள்ளையின் தமிழக சுற்றுப் பயணம் கல்லூரிப் பணிகளுக்கு இடையூறாக இருக்கலாம் என்று கமிட்டியில் தீர்மானித்து அதற்குத் தடை விதித்தார்கள். நேரில் சென்று விசாரித்தபோது, கடும் பயணம் அவர் உடல் நிலையை பாதிக்கக் கூடும் என்று கரிசனம் காட்டினார்கள். ஆறு மாத காலம் அவர் கட்டாய லீவில் போகும்படி நைச்சியம் பேசி, சாதித்தும் விட்டார்கள்.

இது முதல் கட்டம்.

பொருளாதாரத் துறைத் தலைவர் விநாயகமூர்த்தி — வாலைக் குழைத்து வரும் வம்சத்தின் பிரதிநிதி எனப் பெயர் பெற்றவர் — சந்நியாசிகள் கமிட்டியின் செல்லப் பிள்ளை. அவரை 'ஆக்டிங் பிரின்ஸ்பால்' என்று பிரகடனப் படுத்தினார்கள்.

இது இரண்டாவது கட்டம்.

பின்னர், கல்லூரி முதல்வர் என்ற அந்தஸ்து காரணமாக விநாயகமூர்த்தியையே ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பயிற்சிக்கு விமானம் ஏற்றி அனுப்பி வைத்தார்கள்

இது மூன்றாவது கட்டம்.

ஆவுடையப்ப பிள்ளைக்கு அவமானத்தை விட அதிர்ச்சியே தூக்கலாக நின்றது! சந்நியாசிகளின் ராஜ தந்திரம் அவருக்கு உலகம் இன்னதென்று உணர்த்தி வைத்தது... அயல் நாடு செல்லும் வாய்ப்பை அநியாயமாகத் தவறவிட்டுவிட்டாரே என்று நண்பர்கள் அனுதாபப்பட்டபோது 'கல்விடைக்குறிச்சி அப்பளம் கூடத்தான் கடல்கடந்து போகிறது... இதிலெல்லாம் ஒரு பெருமையா?' என்று தமக்கே உரிய உதாரணப் பேச்சுக்களால் சமாதானம் சொல்லி வைத்தார்!

ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் ஆறு மாத காலப் பயிற்சி முடிந்ததும் அப்படியே சிகாகோ—சிங்கப்பூர் என்று உலகப் பயணத்தை மேற்கொண்டு திரும்பினார் விநாயகமூர்த்தி. கல்லூரியை நிர்வகிக்கும் மடத்திற்கு உலகின் பல பகுதிகளில் கிளைகள் இருந்ததால் சென்ற இடங்களில் எல்லாம் செல்வாக்கைச் சேர்த்துக் கொண்டு தாயகம் வந்துசேர்ந்த விநாயகமூர்த்தியை, கடல் கடந்து சென்று இந்து மதத்தின் பெருமை

கலைப் பரப்பிய பணியில் விவேகாநந்தரின் இருபதாம் நூற்றாண்டுப் பதிப்பாகவே. சந்நியாசிகள் சபை பாராட்டுத் தெரிவித்தது...

விநாயகமூர்த்திக்கு நடைபெற்ற வரவேற்பு விழாவில், ஆவுடையப்ப பிள்ளையே முதல் நபராக வாழ்த்துத் தெரிவிக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டதுதான் சந்நியாசிகளின் வஞ்சகம்! ஆனால் தமிழின் பெருமையை உலகறியச் செய்து திரும்பிய விநாயக மூர்த்தியை மனதாரப் பாராட்டியது ஆவுடையப்ப பிள்ளையின் பெருந்தன்மை! தன்னுடைய முன்னாள் மாணவன் பெற்ற வெற்றியை ஓர் ஆசானாக நின்று பார்த்து நெஞ்சம் மகிழ்ந்தார் பிள்ளை. பாராட்டு விழாவில் தன் ஆசிரியரும், லீவு முடிந்து பொறுப் பேற்றிருக்கும் கல்லூரி முதல்வருமான ஆவுடையப்ப பிள்ளையின் கால்களில் விநாயக மூர்த்தி நெடுஞ்சாண்கிடையாக விழுந்து



வணங்கியபோது அவரது குரு பக்தி கண்டு நெஞ்சம் பூரித்துப் போனார். ஆனால் மேடையின் நீள அகலத்தை அளந்த விநாயக மூர்த்தி பிள்ளையின் கால்களில் விழுந்ததே அவரை வாரி விடுவதற்கான வாகான நேரத்தைக் குறி வைத்துத்தான் என்பது ஆவுடையப்ப பிள்ளைக்கு அப்போதே தெரியாமல் போய்விட்டது.

நெல்லையப்பர் கல்லூரியில் எம்.ஏ. எம்.எஸ்ஸி வகுப்புக்கள் தொடங்கப்பட்டபோது — சென்னைப் பல்கலைக் கழகப் பட்டத்தைவிட கூடுதலான தகுதி — ஓர் அயல் நாட்டுப் பல்கலைக்கழகத்தின் சான்றிதழாவது — பெற்ற பேராசிரியரே முதல்வராக நியமிக்கப்பட வேண்டும் என்று சந்நியாசிகள் கமிட்டி தீர்மானம் கொண்டு வந்த போதுதான், இந்த அயல்நாட்டுப் பயிற்சிக்கு விநாயக மூர்த்தி அனுப்பப்பட்ட உள் நோக்கம் ஆவுடையப்ப பிள்ளைக்கு உறைத்தது!

தமிழின்பால் அவர்கொண்ட பற்றுக் காரணமாக, இந்த ஆறு மாதப் பயிற்சியை மேற்கொள்ள மறுத்தது, இன்று தலைமைப் பதவிக்கே ஆபத்தாக முடிந்தது என்பதை உணர்ந்தார். இந்தப் பயிற்சிக்கு இவ்வளவு முக்கியத்துவம் இருக்கும் என்பதை அன்று அவரும் உணரவில்லை, விநாயக மூர்த்தியின் அதிர்ஷ்டம் இவரது பெருந்தன்மையால் விளைந்தது என்பதை உணரும் நிலையில் விநாயக மூர்த்தியும் இன்று இல்லை!

விநாயக மூர்த்தி கல்லூரி முதல்வராகிறார்! — இது நான்காவது கட்டம். முதல் மூன்று கட்டங்களையும் அஸ்திவாரமாக்கி எழுந்த முத்தாய்ப்புக் கட்டம்!

ஆவுடையப்ப பிள்ளை, எதிர்பார்த்தபடியே சந்நியாசிகள் கமிட்டி கூடும்நாள் வந்தது. எப்படியும் அவர்கள் விநாயக மூர்த்தியே கல்லூரி முதல்வராக வேண்டும் என்று தீர்மானம் போட்டுவிடப் போகிறார்கள். பதவியில் ஓர் இறக்கம் வந்துவிடப் போகிறதே என்பதைவிட, பதவிக்காக எப்படியும் வளைந்து கொடுக்கும் விநாயக மூர்த்தியின் தலைமையில் பணிபுரியும் அவலம் நேர்ந்து விடப்போகிறதேஎன்கிறபதற்றத்தில்முன்னதாகவே தம் ராஜிநாமாவை சமர்ப்பித்து விட்டார். அறிவுபூர்வமான சிந்தனைகளும் இதயபூர்வமான தமிழ்ப் பணியும் இனிமேலும் கேவலம் வயிற்றுக்காக அடமானம் போக வேண்டுமா என்று வேலையை உதறி விட்டுப் புறப்பட்டுவிட்டார். வழிமறித்த நண்பர்களிடம் அவர் எப்போதும் கேட்கும் அதே கேள்வியைத்தான் கேட்டு வைத்தார்.

"நெஞ்சைத் தாண்டித்தானே வயிறு?"

நெல்லையப்பர் கல்லூரி என்னும் ஓடையிலிருந்து தமிழ் இலக்கியம் என்ற பெருங்

கட்டில் ஆவுடையப்ப பிள்ளை சங்கமமாகி விட்டார். தமிழ்... தமிழ்... தமிழ்... அதுவும் அரசியல் வாடை வீசாத இலக்கியத் தமிழ். அவருடைய நாவன்மையும் நினைவாற்றலும் கேட்டார்ப்பிணிக்கும்தகையவாய்கேளாரும் வேட்ப மொழியும் ஆற்றொட்டமும் அவருக்கு நிறைய ரசிகர்களை ஏற்படுத்தித் தந்தன. கல்லூரிப் பணியில் இருந்த காலத்தில் அவர் செய்து வந்த கௌரவத்திற்கு இன்று இலக்கியக் கூட்டங்களிலும் வழக்காடுமன்றங்களிலும் கனகாபிஷேகமே நடைபெறத் தொடங்கியது. சிறுகச் சிறுகச் சேர்த்த நகை நட்டுகளை இழக்க நேரிடுமோ என்று அவர் சஞ்சலப்பட்டபோது தொடர் சொற்பொழிவுகளுக்கு அவருக்குக் கிடைத்த சன்மானங்களும் வெகுமதிகளும் இரண்டு பெண்களின் திருமணத்தை ஒரே பந்தலில் நடத்தும் தென்பையும் தந்தன. ஆவுடையப்ப பிள்ளையின் தேதிகளை அனுசரித்து பிற கல்லூரிகளின் ஆண்டு விழாக்கள் அமைக்கப்பட்டதுகூட பெரிய ஆச்சரியமில்லை. பல கோயில்களின் கும்பாபிஷேகங்கள் கூட மாற்றியமைக்கப்பட்டுள்ளன என்பதுதான் அவர்தம் சைவத் தமிழின் சாதனை!

நெல்லையப்பர் கல்லூரியில் பணிபுரிந்த நாட்களைக்கூட ஆவுடையப்ப பிள்ளை கொஞ்சம் கொஞ்சமாக மறக்கவும் மனப் புண்ணை ஆற்றவும் கற்றுக் கொண்டிருந்த நேரத்தில் அதிர்ச்சி தரும் சேதியைச் சுமந்து கொண்டு பேராசிரியர் சாம்பமூர்த்தி தாமிரபரணி ஆற்றங்கரையில் காத்துக் கொண்டிருந்தார். வாட்டம் தோய்ந்த முகத்துடன் வயிரவன் பிள்ளையும் சிலரும் வந்து சேர்ந்தனர்.

"என்ன சாம்பமூர்த்தி.... வேலையை ராஜினாமா செய்திட்டியளாமே..." என்று கவலையுடன் விசாரித்தார் ஆவுடையப்ப பிள்ளை.

"வைஸ்—பிரின்ஸ்பால் பதவியை ஒரே ஒரு நாளாவது அனுபவிச்சிட்டு ரிடையர் ஆனா பென்ஷன் பணம் கொஞ்சம் கூடுதலா கிடைக்கும்னு தப்புக் கணக்கு போட்டுட்டேன் அண்ணாச்சி. இல்லேன்னா அஞ்சு வருஷத்துக்கு முன்னால ஒங்க கூடவே வெளியே வந்திருக்கலாம். உங்க ரோஷத்துக்குத் துணை போனேம்னு பெருமையாவது கிடைச்சிருக்கும்..." என்று அங்கலாய்த்துக் கொண்டார் சாம்பமூர்த்தி.

"இப்போ யாரு வைஸ்—பிரின்ஸ்பால்?"

"வேற யாரு... செந்தில்நாதன்தான்!"

"அவன் சின்னப் பையன்... அவனுக்கு என்னவே தகுதி இருக்கு....?" என்று ஆவுடையப்ப பிள்ளை ஆச்சரியப்பட்டபோது வயிரவன் பிள்ளை பதில் சொன்னார்.

"பந்து பொறக்கின அனுபவம் இருக்கில்லா... பதவியைப் பொறக்கிக்க. அது போதாதா?"

நண்பர்கள் மூவரும் ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் தத்தம் கவலைகளை மறந்து கலகலவெனச் சிரித்தார்கள். இந்த ஐந்து ஆண்டுகளில் கல்லூரிகளின் தரம் சீரழிந்து போனது பற்றி சாம்பமூர்த்தி மிகுந்த வேதனையுடன் சொல்லத் தொடங்கினார்.

கடந்த ஆண்டு பட்டப் படிப்புத் தேர்வுகளில் நெல்லையப்பர் கல்லூரியில் நாற்பத்திமூன்று சதம்தான் தேறியிருக்கிறார்களாம். முதுநிலை பட்டப்படிப்பில் முப்பத்தி ஏழு சதம்தான் வெற்றி...

கல்வியின் தரத்தைக் கங்கணம் கட்டிக் கொண்டு குறைத்த பெருமை சந்தேகமில்லாமல் விநாயக மூர்த்தியைத்தான் சேரும் என்பதை வருத்தத்துடன் பேசிக் கொண்டார்கள் பேராசிரியர்கள். ஆனால் கல்லூரிக் கட்டடத்தின் பளபளப்பும் நிர்வகிக்கிற மடத்தின் கஜானாவும் ஏறிக் கொண்டே போவதென்னவோ மறுக்க முடியாத உண்மைதான்!

"இந்த வழிதான்னு இல்லே அண்ணாச்சி, சொந்தமா நோட்டு அச்சடிக்கலையே தவிர, மத்த எல்லா வழியிலேயும் கஜானாவை ரொப்பறான் விநாயகம்... நீங்க பிரின்ஸிபாலா இருந்த சமயம் எவனாவது பாடப் புஸ்தகம் கொண்டு வரலேன்னா என்ன செய்வீய....? எங்களை ஸ்பேரா ரெண்டு புஸ்தகம் ரெண்டுநோட்டை வச்சிருக்கச்சொல்லுவிய. நாங்களும் அந்த ஸ்டூடண்டுகளுக்குக் கொடுத்து, பாடத்தைப் படிக்கவும் குறிப்பெடுக்கவும் உதவி செய்வோம். இப்பம் என்ன கதை தெரியுமா? புஸ்தகம் கொண்டு வராதவனைக் கிளாஸை விட்டு அனுப்பிச்சிரணுமாம். அவனுக்கு ஆப்ஸெண்ட் போடணுமாம். அப்புறம் அந்த ஆப்ஸென்டுக்கு ஒரு நாளைக்கு ஒரு கிளாஸுக்கு ஒரு ரூபான்னு ஃபைன் போடணுமாம். இப்பத் திப் புள்ளைய துட்டுக் கொழுத்தவனுக இல்லையா... கொண்டு வந்த புஸ்தகத்தை சைக்கிள் ஸ்டாண்டுலேயே போட்டுட்டு வெறுங்கையோட கிளாசுக்கு வர ஆரம்பிச்சுட்டானுக பயலுக.

"காலேஜுக்குள்ள நுழைஞ்சதுக்கு அப்பறம்லா இந்தக் கதை. கேட்டுக்கிடுங்க அண்ணாச்சி. பி.ஏ.க்கு ஐயாயிரம். பி.காம்முக்கு பத்தாயிரம்.எம்.ஏ,எம்.எஸ்ஸிக்குஇருபதினாயிரம் டொனேஷன்! இதுல எதுக்கும் ரசீது கிடையாது. கேக்கவும் கூடாது...." என்றார் வயிரவன் பிள்ளை.

ஆவுடையப்ப பிள்ளை வேதனையால் சூள் கொட்டினார்.

"திருவாழத்தான் அட்மிஷன் நேரத்தில ராவணனாத்தான் அவதாரம் எடுப்பான். ரெண்டு கை போதாதில்லா வாங்கி முடிய... அவனுக்கு சலாம் போடற பேராசிரியர்கள் கைகளை எல்லாம் குத்தகைக்கு எடுத்துக்கிட்டு வாங்கிச் சேக்கான்...."

"புல்லுக்கும் ஆங்கே பொசுயுமாக்கும்?"

"புல்லுக்கு பொசியுதா... பொழியுதுங்கேன். ஆனா நெல் வயல்தான் பொசுங்குது.... அண்ணாச்சி..."

"அண்ணாச்சி... அது மட்டுமில்லே... அட்மிஷன் நேரத்தில வட்டம்—மாவட்டம் ஆதிக்கம் வேறே.... அதனால் பையனுக நாற்றங்கால் பருவத்திலேயே அரசியல்வாதிகளுக்கு நன்றிக் கடன் தெரிவிக்கிறானுக. காலேஜ்

•• இறைவழிபாட்டினை மதம் என்கிறோம்; அறிவை மதி என்கிறோம். மதியையும் மதத்தையும் இணைத்துப் பார்த்தால் புரியும் மதம் என்பது மதியைப் பலப்படுத்தவே என்று.

**தமிழ்ப் புத்தாண்டை முன்னிட்டு சிறந்த பரிசுகள்**
**மற்றும் கூடுதல் போனஸ் வட்டி 2%**

* பரிசுத் திட்டங்கள் — 14.4.1987 அன்று குலுக்கல்

1. டெபாஸிட் தொகை ரூ 2000/— 42 மாதங்களில் ரூ 4000/— ஆகிறது. (கியுமுலேடிவ் டெபாஸிட்.)
2. ரூ 3000/—ஐ 3 வருடங்களுக்கு டெபாஸிட் செய்தால் மாதாமாதம் 21% வட்டி அளிக்கப்படும்.

| பிக்ஸட் டெபாஸிட் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|---|
| ரூ 1000/—ம் அதன் மடங்குகளும் வட்டி | 19% | 20% | 21% | 24% |

ரெக்கரிங் டெபாஸிட்டுகள் வரவேற்கப்படுகின்றன — ரூ 25/ம் அதன் மடங்குகளும்

* ரூ 10,000/— அதற்குமேல் உள்ள டெபாஸிட்டுகளுக்கு வங்கி பாதுகாப்பு பத்திரம்/இந்திர விகாஸ் பத்திரம் வழங்கப்படும்.

* உங்கள் பணத்திற்கு முழுப் பாதுகாப்பு * சிறந்த சேவை



தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:
**EEYEFI INDIA LEASING AND INDUSTRIAL INVESTMENTS**
(ஈஎப்ஐ இந்தியா லீஸிங் அண்ட் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்),
17, 2வது கிராஸ் ரோடு, யுனைடெட் இந்தியா காலனி,
கோடம்பாக்கம், சென்னை—600 024.
தொலைபேசி: 422229

45 மேலமாசி வீதி :: மதுரை—625 001

கிளைகள்: காலிகட், எர்ணாகுளம், திருச்சூர், திரூர், படகாரா, காசர்காட், கண்ணனூர்

விரைவில் திறக்கப்படவிருக்கும் கிளைகள்: பாண்டிச்சேரி, பெங்களூர், மங்களூர், ஐதராபாத், கோயமுத்தூர்

# பரிசு ரூ 200

## பொன்மொழிப் போட்டி — 6

தவறாமல் பங்கு பெறுங்கள். போட்டியில் நீங்கள் வெற்றி பெறுவிட்டாலும் வாழ்க்கையில் வெற்றிபெற நிச்சயம் உதவும்.

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் அச்சாகியுள்ளன. அந்த ஐந்து பொன்மொழிகளையும் பொருத்தம் பார்த்துத் தேர்ந்தெடுத்து இங்குள்ள ஒவ்வொருவர் பெயர் அருகிலுமுள்ள, வெற்றிடங்களில் பிழையின்றி எழுதுங்கள். பிறகு கீழுள்ள இடத்தில் விலாசத்தையும் பூர்த்தி செய்து, இந்த அரைப் பக்கத்தையும் முழுமையாகக் கத்திரித்து அனுப்புங்கள். ஒருவருக்குமேல் சரியான விடை எழுதினால், பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். உறையின் மேல் 'பொன்மொழிப் போட்டி — 6' என்று அவசியம் குறிப்பிடுங்கள்:



பாரதி:

லிங்கன் :

பால்விவாலா :

சத்யசாயி பாபா

காந்தி

முடிவு தேதி: 25.2.87.

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

காம்பௌண்டுக்குள்ள எடறி விழுந்தா, கட்சிக் கொடி கம்பத்து மேலேதான் விழணுங்கேன்!''

''விநாயகம் இதை எச்சரிக்கமாட்டானோ?''

''கட்சி மேலிடத்தோட தயவு இந்த முடிவானுக்கு தேவைப்படுதே.... பட்டதாரித் தொகுதித் தேர்தல்ல நின்னு, பதவியைப் பிடிக்கல்லா அலையுதான்!''

''வேரிலயே விஷப்பை காய்ச்சுத் தொங்குது. விளைச்சல் தீஞ்சு போயிடுச்சேன்னு நாம கவலைப்பட்டா எப்படி....?'' என்றார் வயிரவன் பிள்ளை.

''திருநெல்வேலி டவுனை விட்டுட்டு மதவக்குறிச்சிக்கே போயிரலாம்னு உம்ம மதினி சொன்னா. கிராமத்து வீட்டை எடுத்துக் கட்ட ஆட்களும் போயாச்சு. அதை இப்பமே நிப்பாட்டிற வேண்டியதுதான்.''

''அதை நிப்பாட்டிட்டு?''

''கொக்கர குளம் வீட்டை வெலைக்கு வாங்கி பட்டாசாலையை பெரிசுபடுத்தி ரெண்டு ரெண்டு அறையா தடுத்திடலாம்னு இருக்கேன்...''

''என்ன சொல்றிய அண்ணாச்சி...''

''விநாயகம் தலைமையில புள்ளைக படிப்புல என்ன மண்ணு விழுந்தாலும் வெளியில இருந்து தூசு தட்டி துடைச்சு புள்ளைகளைக் கரை ஏத்துவோம்.''

''பெயிலான புள்ளைகள் வந்து படிக்க பிரைவேட் காலேஜ் ஆரம்பிக்கலாங்கிறீய?''

''பெயிலாகாமகாப்பாத்த நம்மால ஏண்ட வரைக்கும் பாடுபடுவோம்கேன்... தனிப் பயிற்சிக் கல்லூரிதான். ஆனா நெல்லையப்பர் காலேஜில படிக்கிற பிள்ளைகளுக்கு அன்னாடம் ஸ்பெஷல் கோச்சிங்... காலேஜில கல்வித்தரம் கொறைஞ்சாலும் நாம சாயந்திர வேளை; லீவு நாள்ள பகல் பொழுதுன்னு முறைப்படி பாடம் எடுப்போம். நான் பிரின்ஸிபாலா இருந்த நாள்ள எண்பத்தெட்டு சதத்துக்கு ஒண்ணு குறைஞ்சாலும் ஸ்பெஷல் கோச்சிங். வூரந்தவரும டெஸ்ட்டுன்னு வச்சு — எக்ஸ்ட்ரா சம்பளமே இல்லாம — உங்களை எல்லாம் கசக்கிப் பிழிஞ்சு காலேஜ் கௌரவத்தைக் கட்டிக் காப்பத்தலையா...? இப்பவும் அதேமாதிரி செய்வோம். நாம ஒண்ணா இருந்து ஆரம்பிச்ச கல்லூரி. 'கரையான் புத்து வைக்க, கரு நாகம் குடியிருக்க'ன்னு ஆகிட்டாலும் புள்ளைகள் எதிர்காலம் செல்லரிச்சுப் போகாம காப்பாத்தாண்டாமா....? அடுத்த வாரமே கல்லூரி ஆரம்பிச்சிடுவோம். நம்ம பழைய புரபஸர்களையும் சேத்துக்கிடுவோம். என்னால முடிஞ்சதை சம்பளமா தாரேன்...''

''எங்களுக்கு சம்பளம் தராண்டாம். நீங்க இப்பத்தான் சம்பாதிக்க ஆரம்பிச்சிருக்கிய. அதைக் கெடுத்துகிட்டு சாயந்திர நேரத்துல கிளாஸ் எடுக்க வரேங்கிறிய. உங்க பொதுப்பணியில எங்களுக்கும் இடம் கொடுங்க, அண்ணாச்சி...'' என்றார் சாம்பமூர்த்தி.

ஆவுடையப்ப பிள்ளை பெருமிதத்தோடு தலையசைத்தார்.



மந்திரி: அரசருக்குத் தீராத சந்தேகம். ஒரே குழப்பமாக இருக்கார்!

புலவர்: எந்தப் பாட்டில்? எந்த அடியில்... சொல்லிலா, பொருளிலா?

மந்திரி: மண்ணுங்கட்டி.... மகாராணி மீது!

— என்.எஸ்.வி. குருமூர்த்தி



அவர்: எழுநூற்றுப் பத்துப் பேர் கொண்ட எங்க கிராமத்துக்கு மேல்நிலை நீர்த் தொட்டி கட்ட ஏற்பாடு செய்யணும்...

கலெக்டர்: எழுநூற்றுப் பதினைந்து பேருக்கு மேல் இருந்தால்தான் மேல்நிலை நீர்த் தொட்டி கட்ட முடியும்.

— குடந்தை சந்தானம்



"என்னோட இந்த வாழ்க்கை, நம்ம தலைவர் போட்ட பிச்சை!"

"அப்படியா?"

"ஆமாம்... அவராலதானே இந்தத் தொழிலுக்கே வந்தேன்!

— கடுவை கோபால்சாமி



கதாசிரியர்: என்னோட கதைல சின்ன மாறுதல் செய்தாப் படம் நல்லா ஓடும்னு சொன்னீங்களாமே?"

டைரக்டர்: ஆளுங்கட்சி எம்.எல்.ஏ. மகன் எதிர்க் கட்சி எம்.எல்.ஏ. மகளைக் காதலிக்கிற மாதிரி உள்ள கதையை, ஒரே கட்சில, எதிர், எதிர் கோஷ்டி எம்.எல்.ஏ.களோட மகனும் மகளும் காதலிக்கிற மாதிரி மாற்றணும்.

— கிரி. வெங்கடேஷ்

"நம்ம கட்சிக்கு மாற்றுக் கட்சி ஒண்ணு அவசியம் வேணும்னு வலியுறுத்தி அறிக்கை விட்டிருக்கீங்களே, ஏன்?"

"ஆமாம். ஒருவேளை நம்ம கட்சி சரியில்லைன்னு, மாறுவதற்காவது ஒரு மாற்றுக் கட்சி தேவையில்லையா?"

— கடுவை கோபால்சாமி



# கற்றுக் கொடுத்த தலையங்கம்!

* 'எம்.ஜி. ஆர். எழுதும் சினிமாக் கதை' தலையங்கம் அருமை! அருமை! அதைப் படித்துவிட்டு எம்.ஜி. ஆர். உம்மீது மிகவும் கோபமாக உள்ளாராம். ஏனென்றால் அவர் சினிமாவுக்கென்று வைத்திருந்த கதை சமாசாரத்தை இப்படி 'லபக்'கென்று ஆட்டையப் போட்டு (மதுரைத் தமிழ். மன்னிக்கவும். 'அபகரித்து' என்று பொருள்.) தலையங்கம் தீட்டிவிட்டீரே; அதான். சொன்னதுதான் சொன்னீர். முழுசாச் சொல்லியிருக்கக் கூடாதா? பத்திரிகை அறிவிப்பு, 'சத்தி' சமாசாரம் போன்ற பரபரப்பான விஷயங்களை விழுங்கி விட்டீரே! இயற்கை ஏமாற்றிவிட்டதாலும், காவிரி நீர் பிரச்னையாலும், காய்ந்து போன தமிழக நெற்களஞ்சியமான தஞ்சை வாழ் நெஞ்சங்களின் ஆறுதலுக்காக, சினிமாக் கதையெழுதும் சிறப்புப் பணியினை மேற்கொள்ளப் போகின்ற முதல்வரை சும்மாவென்று எண்ணிவிடாதீர்!

சிறுவாலக்காடு, எஸ். சுப்பிரமணியன்.

* எம்.ஜி. ஆர். சினிமாவுக்குக் கதை எழுதுகிறாரோ இல்லையோ, ஒரு சினிமாவுக்குக் கதை எழுத, 'கான்ஃபிளிக்ட், மெலோ டிராமா, சஸ்பென்ஸ், லூம் லென்ஸ் டெக்னிக், கனவு, ஃப்ளாஷ் பாக், காமெடி, எமோஷனல் திருப்பம், கிளைமாக்ஸ் போன்ற பல இன்றியமையாத பாயின்ட்கள் அவசியம் என்று கல்கி தலையங்கத்தின் மூலம் கற்றுக் கொண்டோம். நன்றி.

சென்னை—4, தி.சு. ஸ்ரீராம்.

* வேலையில்லாத் திண்டாட்டம், பொருளாதாரப் பிரச்னை, வன்முறை, எல்லாவற்றுக்குமே காரணம், இந்த முட்டாள்தனமான கல்வி முறைதான் என்ற பிரேமா பாண்டுரங்கனின் பதில்கள் மனமார வரவேற்கத்தக்கவை.

சிங்காரப்பேட்டை—7, வெ.ஆர். க்மல்ப்ரியன்.

* திருமதி பிரேமா பாண்டுரங்கன் பேட்டி சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. அரசியல்வாதிகளின் ஆரவாரக் கூச்சலின்முன், இந்தச் சீர்திருத்தக் குயில்களின் சின்னச் சத்தம் இளைஞர்கள் செவிகளை எப்படி அடையும்?

பெங்களூர்—50, ப. அருள்மணி

* அடிக்கடி அரசு ஊழியர்களுக்கு வழங்கப்படும் சம்பள உயர்வுகள், சலுகைகளைப் பற்றிக் கேட்கப்பட்ட கேள்விக்கு, அரசாங்கத்தின் தோலை உரித்துக் காட்டிவிட்டாரே தராசு! **Keep It up.**

சென்னை—16, அர. மணிவண்ணன்.

* கவடிகள் சொன்ன கதை அருமை. கவடிகளே நேரடியாக எங்களோடு பேசியது போன்ற உணர்வுகளை ஏற்படுத்திவிட்டார்கள் உங்கள் நிருபர்கள்! எத்தனையோ பொக்கிஷங்கள் வீணடிக்கப்படும் இந்தக் காலத்தில் நூற்றாண்டு கண்ட அடையாறு நூலகத்தில் பாதுகாக்கப்படுகின்ற செய்தி மனத்துக்கு ஆறுதலாக இருந்தது.

தோப்புத்துறை, ஹெச்.கே. நாசர்.

* சரத்பவாரின் சாயத்தை வெளுத்துக் காட்டிய 'ஊழலுக்கு ஒட்டுப் போட்டால்....' கவிதை அற்புதம்!

தோப்புத்துறை, எம்.எம். ஷர்புதீன்.

* ஐராவதம் என்ன விகடவுக்குக் கூடப் பிறந்தவரா!? போட்டுக் குழப்பிவிட்டார் போங்கள்... இருந்தாலும் நல்லாத்தான் இருந்திச்சு கதை!

கோவை, உமார்த்தி.

* ஐராவதம் எழுதிய 'ஏழாவது அஸிஸ்டெண்ட்' சிறுகதை, செம சிரிப்பு சார். நீண்ட நாட்களுக்குப் பிறகு வாய்விட்டுச் சிரிக்கும்படியான சிறுகதையை வெளியிட்ட உங்களுக்கு எனது பாராட்டுக்கள்.

மதுரை—1, எஸ். மூர்த்தி.

* என்ன சார் இது, அநியாயமா இருக்கே! ஆம்பளையைப் பொம்பளையா மாத்திட்டீங்களே! பருவ ராகம் விமர்சனத்தில் இசையமைப்பாளர் அம்சலேகாவை அம்சவேணின்னு மாற்றியதைத்தான் சொல்கிறேன்!

பெங்களூர்—16, ஏவியார்.

* மாதம் ஒரு மாவட்டம் என்ற திட்டத்தில் கல்கி ஏற்று நடத்தும் சமுதாயப் பணியைப் பாராட்டுகிற அதே நேரத்தில், 25.1.87 இதழில் எனது பேட்டி பிரசுரமாகியுள்ளதில் ஒரு தவறைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஒரு கேள்விக்கு எனது பதிலாக, 'இதுபோன்ற கேள்விகளையெல்லாம் ஓர் எம். எல். ஏ. கேட்க வேண்டிய அவசியம் இல்லை. கேட்கவும் கூடாது' என்று பிரசுரிக்கப்பட்டுள்ளது. பேட்டியில் அளிக்கப்பட்ட பதில் பின்வருமாறு:

"அட்மினிஸ்ட்ரேடிவ் புரொஸீஜர்' (Administrative Procedure) என்று ஒன்று இருக்கிறது. அதில் லாப்செஸ் (Lapses) இருக்கலாம். லாப்செஸ் இருந்தால் அதைப் பார்க்க அதிகாரிகள் இருக்கிறார்கள். அதன் பேரில் ரிப்போர்ட் எழுதி நடவடிக்கை எடுப்பார்கள். அதையெல்லாம் அதிகாரிகளைக் கூப்பிட்டு கிராஸ் எக்ஸாமின் (Cross Examine) செய்ய வேண்டுமென்றால், அதற்காகக் கூட்டப்படும் கூட்டம் மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டம் அல்ல."

நான் பேட்டியில் தெரிவித்த பதிலுக்கும் இதழில் பிரசுரமாகியுள்ள பதிலுக்கும் நிறைய வித்தியாசமும் அர்த்த மாற்றமும் உள்ளன.

இல. பழமலை,
புதுக்கோட்டை, மாவட்ட ஆட்சித்தலைவர்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

REGISTERED No. M. 4792
Registered as a Newspaper in Sri Lanka

# கைபடாத சேவரிட் சேமியா மணக்குமே உங்கள் கைபட்டதும்!






சேவரிட் சேமியா மிக நவீனமான அயல் நாட்டு இயந்திரங்களால் மிகச் சுகாதாரமான முறையில் கைபடாமல் தயாரிக்கப்படுகிறது.

உயர்தர சம்பா கோதுமை ரவையில் தயாரிக்கப்படும் சேவரிட் சேமியா சத்து நிறைந்தது. குழைந்து போகாதது. சீக்கிரமாகச் சமைக்கக் கூடியது. மேலும், சேவரிட் சேமியாவை வறுக்க வேண்டிய அவசியமில்லை. இது சமைத்த பின்பும் பால்போல் வெண்மையாக இருக்கும்!

சிற்றுண்டிகளானாலும், பாயசம் போன்ற விசேஷ உணவு வகைகளானாலும் சேவரிட் சேமியா உங்கள் சமையலுக்கு ஊட்டமும் சுவையும் கூட்டுகிறது!

ஆகையினால்தான் குடும்பநலன் கருதும் குடும்பத் தலைவிகள் விரும்பி வாங்குவது சேவரிட் சேமியாவே!

**முத்தான அம்மா சமைப்பது சத்தான சேவரிட் சேமியா!**

**Savorit சேமியா**

Sista's - UIM.482.85.TMA